உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நெற்குன்றைமாநகர்

வீரப்பமுதலியாரவர்கள்

அருளிச்செய்த

# சிவசயிலத்தலபுராணமும்

குருவிகுளம் ஜமீன் சம்பிரதி

மீனாட்சிசுந்திரமுதலியாரவர்கள்

இயற்றிய

# சிவசயிலேசர்துதிக்கலிவெண்பாவும்

ஆம்பூர் ரெயில்வே ஸ்டேஷன்மாஸ்டர்

எம். எஸ். கோபாலகிருஷ்ணய்யரவர்கள்

இயற்றிய

# பரமகலியாணியம்பாள்

ஆசிரியவிருத்தமும் அடங்கியுள்ளது.

இஃது

ஆழ்வார்குறிச்சி மேலப்பண்ணை

ஆரைச்சிவசயிலமுதலியாரவர்கள்

ஆம்பூர் போஸ்ட்மாஸ்டர்

ஆழ்வார்குறிச்சிசண்முகசுந்திரமுதலியாரவர்கள்

இவர்களின்வேண்டுகோளின்படி

குருவிகுளம் ஜமீன் சம்பிரதி

மீனாட்சிசுந்திரமுதலியாரவர்களால்

பலஏட்டுப்பிரதிகளைக்கொண்டு வழுக்களைந்து

தற்காலம் ஆம்பூர் ரெயில்வேஸ்டேஷனமாஸ்டராயிருக்கிற

கட்டளை

எம். எஸ். கோபாலகிருஷ்ணய்யரவர்களால்

திருவனந்தபுரம்

அப்பாப்பிள்ளையவர்களது

பி. ஜே. பிரஸில்ப்பதிப்பிக்கப்பட்டது.

 [

சாதாரண௵ புரட்டாசி௴ செப்டம்பர் 1910

சிவமயம்.

ஸ்ரீ சிவசயிலத்தலபுராணம்

# சிறப்புப்பாயிரம்

குருவிகுளம் ஜமீன் சம்பிரதி

## மீனாட்சிசுந்திரமுதலியாரவர்களாலியற்றியது

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அகண்டசச்சி தானந்தப் பரமசத்தி யகிலவுயிர் பரமா கிச்ச, சிகண்டநதி யரியயர்கள் சிறந்தசிர மாலையணி சிர நீலத்தே, சுக ண்டமமு வாதிகைக டுணையடிக போற்றுகுறி தோற்றுமின்ன, வகண்டமதில் வரம்பில்வள மகிமைவாய்ந் துலகுபுகழ் மாநா ட்டு க்குள். (க)

நீர்நாட்டுச் சிரகிரிமா நகர்க்கடுத்த கட்டளையி னிகம மோ துமம், பேர்நாட்டுஞ் சுப்ரமண்ய பிரபலன்முற் றவப்பயனாற் பெற்ற மைந்தன், தார்நாட்டுச் சீர்நுகரும் எம்எஸ்கோ பால கிருஷ்ண சமர்த்தன் பாண்டிக், கோர்நாட்டுஞ் சிவசயில நாதர் கலி யாணியரு ளிலக வென்றும். (உ)

பரமகலி யாணியம்மாள் பாதப்போ திற்சூட்டும் பாத்தா சேய்தோன், பிரமகுலத் திற்சிறந்தோன் பலகலையும் பிரபலபா ஷைகளுங் கற்றோன், வரமுதவு சிவபெருமான் மலர்ப்பாத மற வாத மனத்தோன் சாந்தன், றரம்திக சாதுசங்கப் பிரியனதி சுந்தரசற் குணமே சார்ந்தோன், (ங)

அச்சயில பதியருளா லத்தலமான் மியம் வெளியாக் கவாவு ண்டாகி,மெச்சாழ்வார் குறிச்சியின்மேலப்பண்ணையாரைசிவசயில வேளும், பச்சாம்பூர்ப் போஸ்ட்திபன் சண்முகசுந் தரவேளும் பகர் பண்பாலு, மிச்சகத்திற் பத்திமிகுந் தின்புறப்பாராயணஞ் செய் திடுவா னெண்ணி. (ச)

அன்பூரா மாம்பூரி னிரயில்வே ஸ்டேஷனுக்கு மாஸ்ட ரா னோ, னின்பூறு கலியையா யிரத்தின்மேற் பன்னொன்றி லெழி லச்சிட்டுத், துன்பூமி லாதெவரும் படித்துமிகு சுகம்பெறத்தந் தோன் கொடைக்கு, மின்பூறு முகிற்கொடையுஞ் சிலசமய மிணையிலதாய் விளம்பலாமால்.



உ

கடவுள் துணை.

# ஸ்ரீசிவசயிலத்தலபுராணமுகவுரை.



நீர்வளமும் நிலவளமும் நெருங்கிய அநேக சிவ க்ஷேத்திரங்களும் நிறைந்த சோழநாட்டுத் திரிசிராப்பள்ளி ஜில்லாக் கட்டளையூரிலிருக்கும் சுப்பிரமணிய அய்யரவர்களின் புத்திரரும் சிவநேசச்செல்வரும் சகலவளங்களும்நிறைந்த பாண்டி நாட்டுத் திருநெல்வேலிஜில்லா பொதியமலை தாம்பரபர்ணிநதி பாவநாச க்ஷேத்திரத்திற்கு வடக்காகவும் திரிகூடபருப்பதம் சித்திராநதி குற்றாலக்ஷேத்திரத்திற்குத் தெற்காகவும் விளங்கும் சிவசயிலமலை கடனாநதி சிவசயிலக்ஷேத்திரத்திற்கடுத்துள்ள ஆம்பூரென்கிற அன்பூரின் ரயில்வேஸ்ட்டேஷன் தற்காலமாஸ்டருமான எம். எஸ். கோபாலகிருஷ்ணய்யரவர்கள் ஸ்நானத்திற்காக கடனாநதிக்குப்போயிருந்தபோது ஆழ்வார்குரிச்சி மேலப்பண்ணை ஆரைச் சிவசயிலமுதலியாரவர்களும் ஆம்பூர் போஸ்டுமாஸ்டர் ஷண்முகசுந்தர முலியாரவர்களும் ஸ்நானத்திற்குவந்தவர்களைச் சந்தித்து கல்விகேள்விகளிற்சிறந்த மகாவித்வஜனப்பிரியர்களான மூவர்களுமிஷ்டசல்லாப லௌகிக சம்பாஷணைகள் செய்துகொண்டிருக்கும்பொழுது ஸ்ரீ சிவசயிலநாதர் திருவருளால் அந்த மூர்த்திதல தீர்த்தமாகாத்மியங்களைப்பற்றிப்பிரஸ்தாபிக்கும் நற்சமயம் நேரிட்டதனால்.

அகண்டபரிபூரணசச்சிதானந்
தப்பரப்பிரமச் சன்னிதிச்சத்தி
யருட்பிரகாச மகிலவுயிர்பர
மாகியப்பரசிவ வருளோர்வடிவாய்த்
திங்கடின்பகல்ச் செழுங்கலையோங்கக்

கங்கைவீறடங்கக் காசினிக்கருள
அரியயனார்கட் கனித்தங்காட்ட
மதிநதிதலையணி மாலையாகச்
சிரமிசைவைத்துத் திகழக்காட்டி
விராட்டுருவத்தைமூ விழிகளாற்காட்டிச்
சிவகாருண்யந் தெரிவுறுமாறு
களத்தினினீலக் கறையாற்காட்டி.
அகம்பாவத்தோற் கறிவுறுத்தற்காய்த்
தாருகாவனத்துத் தாபதரேவிய
புலியின்றோலுரித் தரையிற்புனைந்து
மழுவையாயுதமாய்க் கையில்வைத்தாங்
கானையைத்தோலுரித்ததையுடற்போர்த்து
மானைப்பிடித்துச் செவிக்குநேர்வைத்தா
ரரவுங்களைப்பணி யாமார்பணிந்து
பாரிடக்குழாங்களைப் படைகளாய்ப்பணித்து
நகுவெண்டலையைத் தலைமிசைநாட்டித்
துடியைச்செவியிற் றொனியெனப்பிடித்துச்
சினத்தெதிர்கனலைச் செங்கரத்தேந்தி
முயலகனடங்க முதுகினடித்தும்
அருள்வரதபய வத்தங்காட்டி
அன்பர்கண்டிடநீற் றணிகள்காட்டிச்
சத்தியைவேறாய்த் தனிக்கக்காட்டிச்
சத்தியையொன்றாய்த் தன்னிடங்காட்டிச்
சத்திசத்தனைத் தவிரவேறன்றெனும்
அத்துவிதத்தைமெய் யறிவிற்காட்டித்
தானாந்தானாந் தற்பரம்பொரு
ளின்னுமெத்தனை யெத்தனைகோடியோ
கோபப்ரசாத குணபராக்கிரம
லீலையிற்கொண்டு நிகழ்குறிவிளங்கச்
சத்திசமேதராய்த் தருமமால்விடைமேற்
காக்ஷிகண்டெவருங் கதிநலம்பெறுமா
றவர்களாராதனை செய்வதற்கறிகுறி
யாய்ச்சிவலிங்கா காரமாகிப்

பசுப்பால்முலைப்பாற் பகுத்தலேபோ
லித்தாவகண் டப்பிருதிவியிற்
சுயஞ்சோதிமயமாய்த் தோன்றியிருக்கும்
எண்ணுக்கடங்கா மகிமையுமிலகும்
வளங்களும்பொருந்திய மாநாடுகளி
லொன்றும்பாண்டி நாட்டினிலுயர்ந்த

இந்தச் சிவசயிலமூர்த்திதலந் தீர்த்தமாகிய மூவகைச் சிறப்பு களையுந் தெரிவிக்கு மித் தலபுராணமொன்று தாலபத்திரத்திலெ ழுதப்பட்டிருக்கிறதாகவு மிப்போதுசிரம்பவுமவ்வேடுங்கூட அதிக மலின திசையிலிருப்பதாகவும் அத்தகைய வேடு ஷை மேலப்பண் ணைமுதலியாரவர்களிடமிருப்பதாகவும் இதற்கு முந்தி இரண் டொருகனவான்களாகிய ஆழ்வார்குரிச்சிவாசிகளா லிப்புராணமச் சிற்பதிப்பிக்கும் விஷயமாய்ப் பிரயத்தனப்பட்டும் நிர்வகிக்கமுடி யாமல் நின்றுவிட்டதாயுஞ் சொல்லிமுடித்தார்கள். இதின் விர்த் தாந்தங்களையெல்லாங் கேள்வியுற்ற ஷை ஐயரவர்களுக்கு அதை யெவ்விதத்திலும் பல்லோருதவியை முன்னிட்டாவது முன் பிர யத்தனப்பட்டுச் சாதிப்பதான ஒரு இகபர சாதகமான சிவமான் மியமாகிய யிதை யச்சிலிட்டுத்தரவேண்டுமென்ற அவாவதிகரித்த தினால் ஷை இரண்டு நண்பர்களிடத்திலுந் தன்னுடைய கருத்தை வெளியிடவன்னோருமக்கருத்திற் கிசையவே யன்றுமுதலப்பிர யத்தனத்தை கடைப்பிடித்து நோட்டீஸ் மூலமாகவும் பல்லோருக் கு மறிவித்து அநேக குணத்திலுந் தனத்திலு மதிகரித்த நண்பர் களிட வுதவியாலும இத்தகைய மான்மியத்தைப் பல்லோரறிய அச்சிலியற்ற வுதவலாயிற்று.

அதன் பின்னர் முதல்புருப்ஷீட்டுவந்தவுடனதைத்திருத்து தல் செய்தனுப்பும் விஷயமாக வோர்வித்வசிகாமணி வேண்டுமே யென்ற யேக்கம் அய்யரவர்களிட மனதிற் குடிகொண்டிருந்த தால் எனக்கு ஷை யாரவர்கள் முன் தெரிந்திராவிடினும் ஈஸ்வரா னுக்கிரகத்தாற் றெரிந்து என்னையொரு வித்வானாக நினைத்து நா னிருக்குமிடம் நாடி வந்து சொன்னவன்று முதல் வருகிற புரூ புகளையெல்லா மொருவாறுயெனது சிற்றறிவிற் கெட்டியபட்டிற்

கண்ட குற்றங்களைக்களைந்து ஈஸ்வரகடாக்ஷத்தினால் நினைத்தகாரியம் நிறைவேறலாயிற்று. இந்நூல் நெடுநாணின்று உலகத்துக்குத் தக்கபயனை யளிக்கக்கடவது. சுபம் சுபம் சுபம்.

இங்ஙனம்
குருவிகுளம் ஜமீன் சம்பிரதி,
**மீனாட்சிசுந்தரமுதலியார்,**
பாப்பாங்குளம்.



உ

சிவமயம்.

# ஸ்ரீசிவசயிலத்தலபுராணச்சருக்க அட்டவணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# ஸ்ரீ சிவசைலத்தலபுராணம்.

காப்பு.

ஒருகோடிருபதமுமும்மதமுநால்வாயுமுளவைங்கையோன், முருகோடுங்கடம்பனறு முகனொடும்பிறந்ததந்திமுகவனன்னைக், கருகோடும்போதுமுத் தமிடவழைப்பவிருத்தமிடுமெண்ணவேழில், வருகோடிபிறப்பகற் றுஞ்சயிலகணபதிமலர்த்தாள்வணக்கஞ்செய்வாம் (க)

## சிவசைலநாதர்

முருகிதழிபுனல்மதியமுடித் தசடாடவியுடையமுதல்வனன்புற், றுருகுமடியவருளத்திற்பிரியாதகுருமணியாளுடையாளின்பம், பெருகிமையக் கொடிபடாவிடங்கொடுக்கும்பிறங்கல்முக்கட்பெருமான்ஞானந், தருகருணைச்சிவசைலத்தனிமுதல்பொன்னடிக்கமலந்தலைமேற்கொள்வாம். (உ)

## பரமகல்யாணி.

புயலினங்கள்வரக்கண்டுமலர்ப்பதங்களிரிந்தோடமாபோற் செய்ய, கயல்விழியாள்பரமகலியாணிதிருமேனியெனுங்கனத்தைக்கண்ணால், வியனுலகிலுள்ளசராசரங்கடெரிசித்திடிற்றீவினைகளீட்டு, மயறருமும்மலங்களகன்றேடுமவள்மலர்ப்புதத்தை வணக்கஞ்செய்வாம். (௩)

மூலநாயகிசுயம்பாய்முளைத்தநாயகியமரர்முனிவர்போற்றும் வாலநாயகிமேனைமகட்பெண்ணாயகிபிமயவதுணைவசூட்டுங்

கோலநாயகிசயிலக்குழகர்நாயகியெனையாட்கொண்டஞானச்
சீலநாயகிபரமகலியாணிநாயகிதாள்சென்னிசேர்ப்பாம். (சு)

## விநாயகர்

குடமுனிபூசனைபுரியுங்குழகனட்டகுணவரையெங்கோமான்
துத்திப், படவரவாபரணனுறைசிவசயிலமான்மியமுன்பகர்ந்து
வைத்த, வடமொழியைத்தென்மொழியாவகுத்துரைக்கமலவிரு
ளைமாற்றுஞானச், சுடரிரவியெனவருமைங்கரன்மலர்த்தாள்சென்
னிமிசைசூட்டுவாமே. (ரு)

## சுப்பிரமணியர்

வேறு

தடவரையுருவவேல்விடுத்தசண்முகன்
கடகரிமுகவனுக்கிளையகந்தவேள்
குடமுனிக்கருள்புரிகுமரநாயகன்
சுடர்விடுகழலடிதொழுதுபோற்றுவாம். (சா)

## நாமகள்

வேறு.

கற்பூரம்போல்வெளுத்தகருணைவடிவாகியிட்டகாமியங்க, ளற்பூரப்பணிபவருக்கருள்பவளாய்ப் பணிலமிடற்றவளாயார்க்குப், நற்போதமருளியவுத்தமியாகியறுபத் துநாலாய்நின்ற, சொற்போதக்கலைமகளென்வாக்கிலிருந்திடவவடொழுதுவாழ்வாம். (எ)

முகபேதபேதகமாய்விதிபடைத்தேதமதுசெயல்யொழியக்கேட்டு, நகையாடியெனதுசெயலுணர்கிலிரோவுலகதனில்நாதபேதம், பகர்வாரதெனதுதொழிலெனக்காட்டுங்கலைமகள் வெண்படிகப்பூணாள், சகவாணிசரசுபதிதிருவடித்தாமரைதொழுதுதலைமேற்கொள்வாம் (அ)

## தக்ஷிணாமூர்த்தி

வேறு

அருந்தவர்நால்வருக்கறங்களாலின்கீ
ழிருந்துசின்முத்திரையெடுத்துக்கண்களாற்
றெரிந்திடவுணர்த்தியதேவன்சேவடி
பொருந்திடத்தலைமிசைபுனைந்துபோற்றுவாம். (கூ)

## திருநந்திதேவர்

வேறு.

விண்ணவருமாலயனுவெள்ளிவரைதனிலடைந்துவிரைமென்போதாற், கண்ணுதலைப்பூசனைசெய்காலங்கடமினெருங்கக்கண்டேயன்னே, ரொண்ணிறச்செம்பொன்முடியிற்கைப்பிரம்பாலடித்தொதுக்குமொருவனெங்க, ளண்ணனந்திநாயகன்பொன்னடியிணைகடொழுதுசென்னியதன்மேல்வைப்பாம். (ம)

## திருஞானசம்பந்தர்

கள்ளவிழுமலர்க்குழலிகருணைபொழிந்திடுமிமயக்கன்னி செம்பொன், வள்ளமதிற்கறந்துதிருவமுதூட்டவுண்டுகழுமலத்தில்வாழும், பிள்ளைமுத்தின்சிவிகைபெற்றுப்பேருலகிற்சைவநிலைபெருகஞானத், தெள்ளமுதத்தமிழ்வேதமொழிந்தருள்சம்பந்தனடிசென்னிசேர்ப்பாம். (மக)

## திருநாவுக்கரயர்

பொய்வசமாமமணிருளிற்புகுந்திதுபொய்யென்றுணர்ந்துபோதவன்னோர், கைவசமாய்நீற்றறையில்விடத்தில்மதகரியிடத்திற்கடலிற்போடத், தெய்வசிகாமணியருளாலதுகடந்தோர்திலதவதியார்பின்வந்த, சைவசிகாமணியானதிருநாவுக்கரசர்பதந்தலைமேற்கொள்வாம். (மஉ)

## திருநாவலூரர்

பரவைதிருத்தலைவாயிற்படிதேயவடிதோயப்படச்செஞ்சூட்டினரவணிந்தபெருமானையிரவதனிற்றாதனுப்புமண்ணல்சைவமரபுதலையெடுக்கமுன்னுள்முதலையுண்டமதலைதனைவரவும்பாடிக்கரமலைமேற்கயிலைசென்றசுந்தரன்பொன்னடிக்கமலங்கருத்துள்வைப்பாம். (மந)

## திருவாதவூரர்

அருவானவொருமுதலையுருவாகப்பரியேற்றியழகார் தென்னன், கருவாதைகெடக்காட்டிமின்றவரேடியும்பேசக்கண்டோர்ஞானப், பெருவாரிதிருக்கோவைப்பொருள்காட்டியொளிகலந்தபெரியோர்செல்வத், திருவாதவூராளியிருபாதகமலமலர்சென்னிசேர்ப்பாம். (மச)

## திருத்தொண்டர்

சத்தியத்தால்மனைவியைத்தீண்டா திருந்துமுயிர்மனைவிதன்னையீய்ந்தும், பத்தியினால்மகவரிந்துந்தாதைதனைப்படவெறிந்தும்பசுவூரவீன்ற, புத்திரனைத்தேரூர்ந்துமிப்படியேசெயற்கரிய புரிந்தென்னாரு, நித்தியமாய்நின்றதிருத்தொண்டரடித்தாமரையைநெஞ்சில்வைப்பாம். (௰௫)

## குளத்தூரய்யர்

மூவுலகுந்தொழுதேத்துஞ்சிவசயிலநாதர்முக்கண்முதல்வரீன்ற, காவலவன்பிடித்திடுஞ்செண்டாயுதச்செங்கரனிரங்குங்கருணையாளன், பாவையர்கள்பூரணைபுட்கலைபாகன்கலைகள்பற்றறுக்குங்கோமான், றேவர்பெருமான்குளத்தூரய்யனடித்தாமரைகள்சென்னிசேர்ப்பாம். (௰௬)

## சங்கரதேசிகர்

கதியின்வழியிதுவெனவேதிருநோக்கால்வாக்காற்கைப்பரிசத்தாலும், விதியின்முறையுபதேசம்புரிந்தாண்டகுருபரன்மேன்மேலுஞ்செய்யா, குதிவழூவாதியற்றுமறையவர்கள்குலக்கொழுந்துசெல்வங்கொழிக்குங்காஞ்சிப், பதியின்வளர்சங்கரதேசிகனிருபொற்பாதமலர்பணிதல்செய்வாம். (௰௭)

## சிவஞானதேசிகர்

பெருமையளவில்லாதபரமசிவமுயிர்கள்முத்திபெருதற்காகக் கருமையணிகண்டமுநாற்றடந்தோளுமழுமானுங்கண்கள்மூன்று மருமலிபூங்கடுக்கையணிவேணியுமங்கொளித்தருளைவழங்கவந்த தருமபுரிசிவஞானதேசிகன்பொன்னடிக்கமலந்தலைமேற்கொள்வாம். (௰௮)

## குருவணக்கம்

வேறு

அசுபதிசோமவாரமானநாட்சயிலநாதன்
விசுவசவடநூற்றென்னூலாகவும்விரித்துச்சொன்ன
வசுபதிபரசுபாணிமறையவர்திலகம்பெற்ற
பசுபதிசாஸ்த்ரிபாதம்பணிந்துநான்பகரலுற்றேன். (௧௯)

## அவையடக்கம்.

வேறு

புரையில்கதிரவனெதிரேபொலிந்தெரியும்விளக்கதனைப்போலுமொப்பில், மரகதத்தினொளியெதிரேவளையோடுமொளிகாட்டும்வண்மைபோலும், திரைசெய்கடலுலகதனிற்செழுந்தமிழையுணர்ந்தவருஞ்செயலோர்முன்பு, கரையிறவசிவசைலக்கதையினையானுந்தமிழாற்கழறலுற்றேன். (உ0)

### வேறு

கன்னியர்கள்கிளிவளர்த்துக்கையினில்வைத்தவர்வாயாற்
சொன்னசொல்லையதுகுழறிச்சொல்வதுகேட்டகமகிழ்வா
ரன்னைகலியாணிதிருவருள்புரிந்தேதயவிலியா
மென்னையுஞ்சொல்லென்றருளயானுமுரைப்பதுவானேன். (உக

### வாழ்த்து

நீரேறுசடைமௌலிவிமலர்சிவசயிலபதிக்
கேறேறப்பூசைவிழாவினிதேறவளர்ந்தேறத்
தேரேறுவீதியெல்லாஞ்செழிப்பேறக்குடியேற
வாரேறுமுகிலுலவுமாதமும்மாரியும்பொழிய. (உஉ)

சைவசமயம்வளரச்சதுர்மறையோர்குலம்பெருக
பொய்வசமாயிருக்குமறுபுன்சமயநெறிபாற
மெய்வசனமுலகுதனில்விளங்கமன்னர்முறையோங்க
மைவளர்கண்டத்தர்தொண்டர்மனமகிழ்ந்துவளர்ந்தேற.

### நூல்வரலாறு

வேறு

மண்டலம்புகழ வருஞ்சிவசயில மான்மியஞ் சூதமா முனிவன், பண்டரும்வடநூன் முறையினிற் புகன்றபடிபசுந் தமிழினாற் பகர்ந்தா, னெண்டரும்புகழ்சேர் நெற்குன்றைநகருக் கிறை சொக்கனுதனீன்றெடுத்த, தண்டமிழ்சொரிபு மேகவீரப்பன் றமிழ்தெரிபுலவர்நாயகனே. (உச)

ஆகமொத்தம் பாயிரம் பாட்டு உ௰ச.

பாயிரம் முற்றிற்று.

# திருநாட்டுச்சிறப்பு



பூதலத்தினுக்கணியெனச்சிறந்த பொன்னுலக
மீதெனத்திருமாலயன் மகபதியிமையோர்
காதலுற்றினிதிருப்பர்கள் கயிலையாஞ்சயில
நாதனுக் குவப்பாகிய திருமுள்ளிநாடு (க)

வானவர்க்கவியுதவிடமறைவல்லோர்குழுமிக்
கானகத்திடம்வரையிடநதியிடங்களின்மே
லானவேள்விசெய்தருமறைமுழக்கிடுஞ்சயில
ஞானநாயகன்விருப்புறுந்திருமுள்ளிநாடு. (உ)

அப்பெருந்திருநாட்டினிற்செல்வநல்லறங்கண்
முப்பொழுதுளவினைகளுமுடித்திடும்பெரியோர்
செப்பரும்பலவளங்கள்கற்பரிவையர்சிறப்பு
மொப்புவமனில்லாதனவறிந்தவாறுரைப்பாம். (ங)

## வேறு

கலைமகள்போலெழிலிசென்றுகடலாடிப்புனலைமொண்டு
மலைமகள்போலெழுந்தரிகைவளைதனைப்போற்குமுறியரன்
குலைமழுவாளெனவுமின்னிக்குளிருமழைதிரிகூடத்
தலைமலைபெய்தனசயிலத்தலைவர்திருவருள்போலும். (ச)

புதியமழைபெய்துவரும்புனல்வரைச்சந்தனமினவர்
பதிகனியைவனமணிகள்பரலெனக்கொண்டடியவர்போல்
மதுமலர்தண்கனிபொருப்புவளங்களும்பற்பலகடனை
நதிபெடுத்துச்சிவயிலநாதனைப்போற்றிடவருமால். (ரு)

கங்கைபெனுங்கடனைநதிகண்ணுதல்பொற்பதம்போற்றி
செங்கைதொழுதெழுந்தவனிசெழித்துமிகக்களித்திடவே
பொங்கியணைகால்குளங்கள்புகுந்துமிகுந்திடுநீர்த்தங்
தங்கியிடும்படியுழவர்தனித்தனியேசதிரிடுவார். (சா)

பெருகுபுனலுடனவிரும்பிரசநறுங்கனியிரதம்
விரைசெய்மலர்முருகுபலமேமென்மேலுந்திரண்டோடித்

திரைசெய்கடலெனவிருக்குஞ்செழுமலர்வாவிகள்தடங்கள்
கரைபுரளமிகப்பெருக்கிக்கழனிகளுஞ்செழித்திடுமால் (௭)

கருங்குவளைமடவார்கள்கண்காட்டுங்கமழ்பிரசந்
தருங்கமலமுகங்காட்டுஞ்சைவலம்பூங்குழல்காட்டு
நெருங்குவளைநகைகாட்டநித்திலங்கடனைக்காட்டு
மருங்குவளர்கயிரவங்கள்வாய்காட்டுவனதடங்கள். (௮)

வள்ளைகுழைகளைக்காட்டுமதிநுதலைக்குளங்காட்டு
மள்ளலறும்பங்கயமெல்லரும்புமுலைகளைக்காட்டுந்
தெள்ளமுதந்தருமிதழைச்செம்பவழக்கொடிகாட்டுந்
துள்ளுவரால்கணைக்காலின்றெழில்காட்டுவனமடுக்கள் (௯)

வண்டுமதுவுண்டிருக்கும்வனசமின்னார்முகமதியைக்
கண்டுகுவிந்திடுமெனப்போய்க்கட்குவளைதனிலொதுங்குந்
துண்டமதிக்களங்கமெனத்துவன்றுவதைக்கைக்கமலங்
கொண்டுகலைத்திடுவரவர் குழல்மீதிற்குடியிருக்கும் (௰)

புட்கமலமிசையிருந்துபொலிந்துவயங்கியதோற்றம்
விட்குலவுமதியுமதின்விளங்குகளங்கமுமாக
மட்குலவுமதியமெனமடந்தையர்கள் வியந்துதங்கள்
கட்குவளையலர்த்திடுவார்கருங்குவளைமுகிழ்த்திடவே (௰௧)

போரரவாடவனெதிர்ப்பைப்பொதிவிரித்தல்போற்கமலந்
தேரிரவியுதித்துவரிற்செழுமுகைகள்விரித்தலருங்
கூரிருளாடையைநீக்குங்குளிர்மதியின்மயிர்க்கூம்பி
நீரரவுதலைநீட்டிநின்றதுபோன்றனநீலம். (௰௨)

வனக்கமலத்தோட்டின்மிசைவண்டினங்கள்தாலாட்ட
வனச்சிறார்கண்டுயிலுமலர்க்கைதொட்டிலசைத்தாட்டுஞ்
சினக்கருவரால்களடைச்சேக்கையின்மேற்கருவுயிர்க்கும்
புனற்குடையுமகளிர்குழாம்பொலியுமலர்த்தடமெங்கும். (௧௩)

அனமென்பாரன்றென்பாரனஞ்சூடுபடுமரம்பை
யினமென்பார்பதியிருந்துமில்லாதபேரென்பார்
தனமின்பாவையரென்பார்தகாததுவுந்தருமென்பார்
வனமென்பதெல்லாமோர்வடிவானமடந்தையரை, (௧௪)

மின்னென்பார் துடியென்பார் மின் துடிக்கும்வானென்பார்
புன்னென்பார் நூலென்பார் புன்னூலுஞ்சிறியது பின்
னென்னென்பாருண்டில்லையென்பதிதுவாமென்பார்
பொன்னம்பாவைவயையிகர்க்கும் பூவையர்கள்கொடிநுசுப்பை (கரு)

வேலென்பார் வேலுலையில் வெந்தடிபட்டதுவென்பார்
கோலென்பார் கோற்புறம்போய்க் குதைப்பட்டதெனப்புகல்வார்
சேலென்பார் புலானூற்றந்நீராதவுருவென்பா
ரேலஞ்சேர்குழலியர் தமிணையான துணைவிழியை. (கசு)

முருகோடிவரக்கயல்கண்முன்னோடியெதிரேறுங்
குருகோடிப்பறந்து கொத்திக்குடவளைமேலிருந்தருந்து
மருகோடிக்கமடமின்னாரடிப்புரஞ்சேற்றிடைகாட்டு
மொருகோடிகடைசியர்களுலவியபூங்கழனியெல்லாம். (கஎ)

கால்நெறிதண்ணீரொதுக்கிக்கழனியெல்லாம்புகப்பரப்பிச்
சீலமுறுமோரைகளிற்செம்பொனலத்தேர்பூட்டிக்
கோலவளைக்கடைசியர்கள் குரவைமுழக்கிடவயலிற்
சாலவளைந்தாடல்மள்ளர்சந்தனச்சேறெனவுழுவார். (கஅ)

செய்யிலுழுமள்ளர்முகஞ்செழுங்கமலமெனக்கருதி
தொய்யின்முலைமலைகடணைச்சுமந்துமருங்கிறுமெனவே
மையிருழ்சேர்குழற்காட்டும்வண்டறையக்கடைசியர்கண்
ணையமிலாதவர்முகத்திலளியெனவீழ்ந்துலவிடுமால். (கஅ)

ஒருவரொருவரைச்சருவியுவப்பொடுபூமதுக்குடிப்பார்
மருவலுறுமள்ளியர்தமள்ளரையூடித்திரிந்து
செருவிளைப்பாரவர்கண்மனந்திருந்தமள்ளர்கைகளினாற்
கருவராற்பிடிப்பவர்போற்கணைக்காலைப்பிடித்திடுவார் (உ0)

வயல்வரம்பிலிருந்தகைதைமடல்சாய்த்துக்கிடப்பதுதண்
பயனிழலிற்றேன் றுதலும்படர்சிறைவெண்ணுரையெனக்
கயலினங்கள்வெருவிமறுகழனியிற்பாய்ந்திடுதோற்றம்
வியனுடுக்கள்பலவெரிந்துவீழ்வதுபோன்றனமாதோ. (உக)

மள்ளருழுஞ்சால்வழியேமலர்முருகுதிரள்வோடத்
துள்ளியசெங்கயலினங்கள்சூழ்சங்கமிசைபாய

வெள்வளைமுத்தீனுமதைவெண்குருகுதன் கருவென்
றுள்ளனுறும்பங்கயமெல்லடைகிடக்குஞ்சிரகணைத்து. (உஉ)

குடவளையையடுப்பேற்றிக்குளிர்நறவமுலையூற்றிக்
கடனையின் மாமணிமணலைக்கழுவிப்பதின் மிகப்பெய்து
படவரவின் மணியனலாய்ப்பகர்கடைசிச்சிறுமியர்சோ
றடுதொழில்செய்திடுவர்சிற்றிலாங்குநெருங்கவுமமைத்தே. ( )

இரவலருங்குமுதமல்லாலிரவலரங்கொருவரிலைக்
கரவுசெய்வதுமூவரல்லாற்கரவுசெய்வாரெவருமிலைத்
திரமொழிவாரன்றியுங்குத்திரமொழிவாரிலைப்பலகால்
கரமலரஞ்சலிசெய்தரகரவெனநின்றிடுவருள்ளோர் (உச)

அலமுளவருழவரல்லாலலமுளவரொருவரிலைச்
சலமுளகானதிகளல்லாற்சலமுளவரெவருமிலைக்
கலமணிவாரன்றியுமட்கலந்தொடுவாரிலைச்சிவனை
வலம்வருவாரெவர்களுங்கேவலமறியார்நாட்டினுள்ளோர் (உரு)

மஞ்சரியினிடையிருந்துமறைபாடுங்கிளிபொழிலிற்
**சஞ்சரிக்கும்**குயிலினங்கடானேயின்னிசைபாடுங்
குஞ்சரிபூமதுவருந்திக்கோதறுசெவ்வளிபாடும்
பைஞ்சுரங்கடனையெடுத்துப் பாடுவபூவைகள்மிகவும் (உசு)

வட்டமதிமண்டலத்தைமருவுமரம்பையின்குலங்க
ணெட்டிலைத்தெங்கினங்கதிரோனெடுநிலத்தையுறவளரு
மட்டவிழ்பலாக்கனியைமத்தளமென்றோர்குரங்கு
கொட்டவொன்றுகூத்தாடுங்குளிர்சோலையிடமெங்கும். (உஎ)

கருப்பாலையிறங்கியபாற்காச்சியடுபுகையுமன
விருப்பாலேமறையவர்செய்வேள்வியினாகுதிப்புகையும்
பொருப்பாய்விண்மேகமெனப்பிறங்குதலுங்கவ்வுபட
வரிப்பாந்தண்முகத்தாடமயிற்றோகைவிரித்தாடும். (உஅ)

சூதநறுங்கனிபறித்துசுவைத்துருசிபார்த்ததனைக்
காதலுறுந்துணைக்கருத்திக்கட்குளிகடனைமுகிழ்த்துப்
பேதைமடக்கவியதனைப்பெலக்கடுவன்சாரன்மழைக்
கூதல்தனக்கணைத்துறங்குங்குரங்குகண்மாமரமெங்கும் (உகூ)

மாங்கனியைப்பறித்துமந்திவயலுழவர்மேலெறியு
மாங்கவர்கள்பணிலமெடுத்தக்கவியையடர்த்தெறிவர்
பாங்குநின்றகமுகேறிப்பழுக்காய்விட்டெறிந்துறுமு
மீங்கிவர்கள்வளைதடிபோலெழில்வாழைப்பழமெறிவார். (௩௰)

கன்னல்முத்தும்பூகமுத்துங்கமலமுத்துங்கழனிவிளை
சென்னல்முத்துங்குடவளையின்செழுமுத்துந்திரண்டொன்றாய்த்
துன்னிவயின்வயினிரைந்துதுவன்றுவதைக்கடைசியர்க
ளின்னதின்னதென்றுதெரித்திடுவர்வரும்பலிக்கிடுவார் (௩௧)

கோங்கரும்பைநோக்கியுந்தங்குவிமுலையைநோக்கிடுவார்
பாங்கிருந்ததனவரும்பைப்பார்த்துநகைகூர்த்திடுவார்
பூங்கதலிநங்குறங்குபோலிருப்பதெனப்புகல்வார்
தீங்கரும்புசுமந்தாலேசேரவருங்கடைசியர்கள். (௩௨)

மான்மதச்சேறெனவீசவயற்சேறுபடவுழுது
பான்மதிபோலூர்ந்துலவுபணிலமெலாம்வரம்பேற்றிக்
கானமருந்தண்கமலங்கைக்கமலத்தாலரித்து
மீனவிழிக்கடைசியர்கள்வெள்வளையின்பாங்கிடுவார். (௩௩)

பங்கமுறும்பழனமெல்லாம்பணைமருதநிலமாகு
மங்கதற்குத்தேவன்விண்ணுக்கரசனென்பதாலவற்றுட்
கங்குலெனவிருண்டகுழற்கடைசியர்கற்பகங்காட்டிச்
சங்கநிதிபதுமநிதிகளைக்காட்டுந்தகைமையதே. (௩௪)

செய்யெல்லாந்தெளிப்படுத்தித்திருத்தியபின்நித்திலம்போற்
றுய்யமுளைகாலும்வித்தைச்சுமந்துமள்ளர்கொடுபோந்து
கையினால்வித்திடலுங்கமுனியெல்லாமங்குரித்துச்
சைவநாயகங்கடலையெடுப்பதுபோற்றலையெடுக்கும். (௩௫)

முளைத்தெழுந்தபசுஞ்சாலிமுக்கவர்கொண்டிக்கெனவே
கிளைத்துமடல்விரித்துநல்லோர்கிளைகளுடன்குழைவதுபோற்
றளைத்துவரம்பிணைக்கடக்குந்தண்மைகள்கண்டுண்மகிழ்வா
ரிளைத்தவிடைக்கடைசியர்செய்யெங்கணுநாறிடத்திரிவார். (௩௬

மள்ளியர்நாறுகள்பிடுங்கிவளைக்கையால்முடிசேர்ப்பா
ரள்ளிமள்ளர்திரையமைப்பாரதைச்சிலவர்கொடுபோவார்

கள்ளூறு தாமரைவதனக்கடைசியர்தேவதந்தொழுதங்
கெள்ளிடவுமிடமின்றியிடைதுவழநடுவர்சிலர் (௩எ)

மைநாறுங்குழற்கடைசிமள்ளியர்துள்ளியசேற்கண்
செய்நாறுநடப்புனலிற்றிரிந்துலவுசேலெனவே
மெய்நாறுசிறைக்குருகுவிரைந்துகொத்திவெள்குறுஞ்செங்
கைநாறுகொண்டோச்சிகலைத்திடுவர்கழனியெங்கும். (௩அ)

புரவிலுழுமேர்முழக்கும்போர்க்களத்தின்மள்ளர்பண்டி
விரவியளந்திடுமுழக்கும்விண்ணையளந்திடும்புவிசூழ்
பரவைமுழக்கமுமடங்கப்பழனநடுங்கடைசியர்கள்
குரவைமுழக்கிடுவரிதழ்குவியவுநானுனியசைத்து. (௩௯)

பண்ணுறுஞ்செழியதமிழ்ப்பழகியநாடதனின்மிகு
கண்ணுறுகொழும்வயலிற்கடைசியர்கள்நாறான்றிக்
கண்ணுறுமொழிப்பாடல்கருங்குயில்கேட்டலம்வந்து
விண்ணுறுபரந்துநின்றுவியப்பெய்திவெள்குறுமால் (௪0)

நட்டசெழுஞ்சாலிகளுநாட்குநாள்வளர்ந்தோங்க
மட்டுலவுநறைப்புனல்வாய்மடையொதுக்கிப்பாய்ச்சிமள்ளர்
சிட்டரைமன்னவர்புரக்குஞ்செயல்காட்டுவார்வணங்காத்
துட்டரைநிற்கரிப்பதெனுந்தொழில்காட்டிக்களைகடிவார். (௪க)

மிகப்பொலிசாலியிற்களைகள்விரைக்கமலமருங்குவளை
வகுப்பினெடுகளைகள்கட்டமள்ளியர்செய்யுள்ளிறங்கி
யிகப்பிறவிதன்வேரறுத்தெறிவார்போலவர்த
முகப்பகையும்விழிப்பகையுமுளைத்ததெனவெடுத்தெறிவார். (௪உ

எடுத்தகளைக்கமலமுடனெழிற்குவளையிருந்தவிடத்
தடுக்கல்முலைமள்ளியர்கண்ணுனமுமதுபோல
நடிப்புனலிற்காட்டுதலும்நனைகளுண்ணவளிபறந்து
கடிக்கமலங்குவளையெனக்கறங்கெனவேசுழன்றிடுமால். (௪௩)

நீலநிறக்குழல்காட்டும்ஞிமிறுகண்மேற்பறந்திரையக்
கோலவளைக்கைகளினூற்குழல்வண்டுகளையோட்டிச்
சாலிதனிற்களைகடிந்துதடமுலைமள்ளியர்களிரு
காலில்வராலிடறமெல்லக்கலையொதுக்கிக்கரையணைவார் (௪௪)

அரத்திரண்டுபசுஞ்சாலியடர்ந்துபொதியாகிமடல்
விரித்துநிறைகதிர்காட்டிமிக்கோங்கியடியர்பொடி
தரித்திடுதல்போன்றமுதந்தனைக்கோலிவதுவைபுரி
வரித்தடங்கண்ணார்சிரம்போல்வளைந்துதலைகவிழ்ந்திடுமால். (சரு)

பாணிறம்போல்மடல்வெளுத்துப்பசுஞ்சாலிவிளைந்துகதி
ரோணிறங்கிமனைவியுடனிருப்பதெனவுள்ளிருக்குந்
தேனலர்பங்கயமலரிற்சேர்ந்துகிடந்திடுவதல்லால்
நான்முகனும்வாணியும்போல்நளினமிசைப்படுத்திருக்கும். (சசு)

விளைந்தகதிர்தனையரிந்துமிகச்சுமந்துபோந்துவிண்ணை
யளந்திடலாய்ப்போரேற்றியதைப்பகட்டாலடித்துடன்வை
களைந்துபொலியாற்றிவெள்ளிக்கயிலையும்பொன்மேருமிக
வளர்ந்ததெனக்குவித்திடுநெல்மள்ளர்பண்டியாலளப்பார். (சஎ)

ஆறிலொன்றுகடமைமன்னர்க்களந்துமற்றையைந்துபங்கி
லீறில்பெருங்கிளைவிருந்தோடினியகுருதெய்வதங்கள்
கூறளந்துதாமுமொருகூறுகொண்டுகுடிமைசெய்து
மீறுசெல்வந்தழைத்தோங்கிவிண்ணுலகைநிகர்த்திடுமால். (சஅ)

வேறு

இழைத்தமாடமுகப்புகளெங்கணு
முழைத்தநீற்றுப்பிறைமுகங்காட்டியே
களைத்தவெம்பசியோர்தமைக்கைகளா
லழைத்தல்போனின்றனக்கொடியாடுமால். (சகூ)

விண்டொடுநிலைக்கோபுரம்வேதிகள்
மண்டபமரங்கெங்கணுமானனார்
பண்டரும்பாடலாடல்பரந்தொலி
யண்டர்நாடளந்தப்புறமேகுமால். (ருய)

தெள்ளுவேதந்தெளிந்தமுதுமறை
வள்ளியோர்சொல்லக்கற்குமறைச்சிறு
பிள்ளைகளோதக்கேட்டதன்பின்பசுங்
கிள்ளைகளுந்தங்கிடைகளைக்கூறுமால். (ருக)

கன்னிமாடமியற்றிக்கனகத்தால்
நன்மணிகள்குயிற்றிநகைதர

மின்னிடைதுவண்டின்னன்மிகப்பட
வன்னலாருக்கனநடைகாட்டுமால். (௫௨)

பூவைகஃபஞ்சரங்கள்பொருந்தியே
பாவினோடிசைப்பண்வழுவாமலே
மூவர்பாடியமுத்தமிழ்வேதமாந்
தேவாரங்களைத்தெற்றிபாலோதுமால். (௫௩)

சாந்தணிந்ததடமுலைக்கோதையர்
காந்துபல்கலன்பூட்டிக்களைந்ததைப்
போந்தவீதிப்புறத்தெறிவாரென்று
லேய்ந்தசெல்வமியம்பமுடியுமோ. (௫௪)

இன்னதாகியநாட்டினிலேங்கெழிற்
பொன்னின்மாநகரொன்னவும்பூமகள்
சென்னிபோன்றதுசெல்வமுமல்கியே
மன்னுமன்பூர்மகத்துவம்பேசுவாம். (௫௫)

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (௭௰௧)

---

# திருநகரச்சிறப்பு.

அம்புவியிற்றருமங்களனைத்துமொருவடிவாகிக்
கும்பமுனிபொதியைவடகுணபாலக்குதித்ததெனக்
கம்பவுளமாவுரித்தகண்ணுதலோர்சிவசயில
நம்பரனுக்குவப்பானநகர்பெருமையெடுத்துரைப்பாம். (௧)

வேதியரும்வானவரும்மிகக்குழுமிவிரவிமறை
போதிடுவரிமைப்பிலதாலும்பரிவரெனத்தோன்றுந்

சோதிலருந்தவமுனிவர்குறைபாடற்றினிதிருப்பா
ராதிசிவசயிலபதிக்கன்பூரென்பதைக்காட்டி (௨)

சதுர்மறையோர்மகம்வளர்த்துத்தணவாமுத்தீயீட்டி.
முதிருமருந்தவம்புரிவார்முடுகியதபாக்கினியும்
பதிவிரதமகலாதபாவையர்கற்புறுதீயும்
விதிவழியேநடப்பதினான்மேன்மேலுந்தழைத்தோங்கும் (௩)

மிக்கமறையோரமரர்வேதமமைழசிவசயில
முக்கண்மலையினிற்பொழிவார்முகின்மழைகள்பொழிவதென
வக்கருணைவெள்ளமுயிரானபயிர்களிற்பாய்ந்து
தொக்குமலக்களைகளையச்சுகவாழ்வுற்றிருக்குமவ்வூர். (௪)

குருநந்தியிறைவனெனக்குருமொழிநிற்பார்பிறவிக்
கருநந்தவிறைவனுக்குக்கடணையினீராட்டிடுவார்
திருநந்தவனமமைத்துத்திருப்பணிசெய்வார்நாலு
வருணந்தன்னினுமுள்ளோர்மகத்துவம்பெற்றிருப்பவரே. (௫)

இருபிறப்புமறையவர்களியாகவினைத்தொழில்புரிவார்
சருகுசலம்வாயுவுண்டுதபோதனர்கள்தவங்களுய்வார்
மருவினியதவயோகவழியாய்ந்தந்நெறியினின்றே
வுருகியபேரன்பினரங்குள்ளபெரியோர்களெல்லாம். (௬)

பாலருடனுன்மத்தர்பசாசர்குணங்களைமருவி
ஞாலம்பேயென்றுணர்ந்தஞானிகளெண்ணிலரிருப்பார்
மாலயனுக்கறியபிரான்வகுத்திடுமாகமவசன
மூலங்கடணையுணர்ந்தம்முறையினிற்பாரெவர்களுமே. (௭)

அன்பூரேசிவசயிலமாகவினிதமர்ந்தருளு
மின்போலுஞ்சடைமுடித்தவிமலனுமையவளுடனே
தென்பாலிற்கயிலையதிற்செனித்தவுயிர்தாபரங்க
ளின்பானசிவகணமுமிமையவருமானவரே. (௮)

தண்ணப்புமுடித்தசடைச்சங்கரனார்க்கன்புருவாய்த்
திண்ணப்பேரான்மென்றுநின்றதசைப்பரிவினொடு
முண்ணப்பவெனவூட்டவுள்ளமுவந்திடுமரனைக்
கண்ணப்பன்போற்றுதிருக்காளத்திசிவசயிலம். (௯)

நச்சடையுங்கண்டர்பதினுலுலகுந்தொழுதேத்த
முச்சடையின்குறிகாட்டிமுளைத்தசதாசிவத்தையன்பாற்
பச்சடையுந்தண்மலரும்பதமுபருச்சித்திமையோர்
சச்சடையும்பலகாலுந்தவசயிலஞ்சிவசயிலம். (௰)

நதியெல்லாம்பொழிலமுதநனைபெல்லாங்கலந்தோடு
நிதியெல்லாமதில்விளையுநிலமெல்லாங்கனகநிலந்
துதியெல்லாமறைமுழக்கந்தொழில்களுஞ்சாத்திரவழக்கங்
கதியெல்லாமொருவடிவாய்க்காட்டுவதுசிவசயிலம். (௰௧)

வயலெல்லாம்விளைசாலிவரம்பெல்லாங்களைவேலி
கயலெல்லாங்குதிபாயுங்கமுகெல்லாமதிதோயும்
புயலெல்லாந்தவழிஞ்சிபொழிலெல்லாம்படர்வஞ்சி
செயலெல்லாஞ்சிவன்செயலென்றிருக்குமுயர்சிவசயிலம். (௰௨)

வரையில்வளர்வரைமுத்துமதகரியின்மருப்புமுத்தும்
புரையினவமணிகளுந்தண்புனலுடுமணலாக
விரைகமழ்சந்தனம்வேங்கைவியன்மஞ்சளிஞ்சிபல
கரைபுரளத்திரைகொழிக்குங்கடனைமகத்துவமெளிதோ. (௰௩)

சிருக்கெடுத்தமலர்ப்பாணிசிவசயிலப்பெருமானுக்
கருக்கிதழிகோங்குபுன்னை யச்சுதம்வில்வத்துடனே
மருக்கமழ்சண்பகமலரிமலர்பலகொய்தயன்றிருமா
லிருக்குமொழிந்தருச்சனைசெய்திடுவர்கடனையின்மூழ்கி (௰௪)

மூதுணர்விற்சரியையின்முயன்றுதிருப்பணிசெய்வார்
காதலினற்கிரியையிற்கண்ணுதற்பூசைபுரிந்திடுவா
ரோதரியசத்திசிவமந்திரயோகத்திருப்பார்
போதமுடன்வினைசமனுய்க்கண்டவரும்பொலிந்திருப்பார். (௰௫)

சாத்திரம்வாசிப்பர்பலசங்கமுடன்றேவாரந்
தோத்திரஞ்செய் [illegible] டியார்தொகுதிபலவறிவினுக்கு
நேத்திரம்போ [illegible] அருள்ஞானநிலைநிறுத்தியிடுமிந்தச்
சேத்திரம்போற்சிவசயிலச்சிவன்பேரெலங்கணுமுளதோ. (௰௬)

சினேகபுரமாயிருக்குஞ்சிவசயிலந்தனில்வசிக்க
வனேகதவஞ்செய்தவருக்கல்லாதுலபித்திடுமோ

பனாகமதிமுடித்தசடைப்பரமசிவன்பதமலரைக்
கனாவினிலுமறவாதகருத்தினரங்கிருப்பவரே. (௰௭)

பெரியவராய்த்தலத்தைப்பிரியாதபேரெவருந்
தரியலர்முப்புரமெரித்தசயிலபதிபதம்பெறுவர்
கரியபன்றிமலர்ப்பதமாங்கழல்தேடிவீணலைந்த
வரியயனுமிதில்வசித்தாலடிமுடிகண்டிடுவரே. (௰௮)

சீர்காட்டும்வளங்களுண்மைதிறங்காட்டும்பெரியர்மறை
போர்காட்டுங்கிடைகள்தவவொளிகாட்டுமிடங்கள்கற்பு
நேர்காட்டுமாதர்முத்திநிலைகாட்டுஞ்சிவத்தையுமன்
பூர்காட்டுவதுவானாலுரைகாட்டிப்புகல்வதென்னே. (௰௯)

கடுத்ததும்புங்கண்டர்திருக்காளத்திமலையிலன்பாய்ப்
பிடித்துநின்றசிலைவேடர்பெருமானுக்களித்ததுபோ
லடுத்துவந்தவுயிர்களுக்குமப்படியேபரமபதங்
கொடுத்திடுவதாயிடபக்கொடிகட்டியிருப்பதுவே. (௨௰)

திருநகரச்சிறப்பு முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௯௰௯.

---

# தலவிசேடச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

சிவமிகுத்திடுந்திருவருள்கொழித்திடுஞ்செனனப்
பவமகற்றிடும்பரகதிகொடுத்திடும்பகரி
லுவமனற்றதுநற்றவர்பெருக்கமங்குளவாந்
தவமகத்துவமுடையனநயிமிசாரணியம். (௧)

விலங்குதாபரமூர்வனபரப்பனவிண்ணோ
ரலங்குநீரினில்வாழ்வனமாக்களுமைந்து

பலன்பொறிகளைச்செயித்தவணிருப்பதாற்புகலில்
தலங்கடன்னிலுமேலதாநயிமிசாரணியம். (உ)

முப்புவனமும்பெருமையைவிளக்கிடுமுதலா
யொப்புவமனில்லாதகற்புதுமையுமுளதா
யப்புவேலைசூழ்நிலமகட்கணிதிலகமுமா
யிப்புவிக்குயர்நயிமிசாரணியமென்றிசைப்பார். (௩)

அருந்தவத்தினர்க்குறையுளாயிருக்குமவ்வனத்திற்
பெருந்தவச்சவுனகர்முதலாதியோர்பிறருந்
திருந்துவேதவியாசர்தம்மிணையடிசிந்தித்
திருந்தருதனையடைந்தொருமொழியியம்பினரால். (௪)

தவக்குரிசிலேசதுர்மறைவலவசாகரஞ்சூழ்
நவப்பிருதிவிதனிலுளவுயிரெல்லாநயந்தே
யுவப்பதாய்ச்சிவகதையமுதினைச்செவிக்கூட்டிப்
பவக்கடல்சுவற்றிடவவதரித்தனைபழையோய். (௫)

பண்டுநீயொருக்காலமியாஞ்செய்தவப்பயத்தா
லண்டர்நாயகனுறைதலமகிமைகளனைத்தும்
விண்டருள்புரிந்தனைசிவசயிலமெய்ப்பதியொன்
றுண்டெனுவதின்மேன்மையுஞ்சிறிதெமக்குரைத்தாய். (௬)

ஆகையாலுமத்தலமகத்துவத்தையாமறிய
மோகமாயினோம்விரித்துநீமொழிந்திடவேண்டும்
நாகநாயகமாகியகயிலைநாயகன்பெண்
பாகனுண்டெழுந்தருளியேலிங்கவுற்பவமாய். (௭)

அத்திரிமுனிபூசனைபுரிந்திடவதிக
வுத்தமத்தினுக்குத்தமசதாசிவவுருவாய்
முத்தமிழ்வரைக்குத்தரதிசையினின்முழங்கித்
தத்துதண்புனற்கடனையின்றென்கரைதனிலே. (அ)

குடதிசைமுகமாயிருப்பதுதிரிகூடத்
தடவரையெனமுனிவரர்சாற்றுவதொன்றுங்
கடனையின்கரைகண்ணுதற்பற்பலகணங்கள்
புடைநெருங்கிடச்சிவசயிலப்பெயர்பொருந்தி. (௯)

கருப்புயற்குழலுமையவள்பரமகல்யாணி
விருப்புறச்சிவலீலைகள்விளைத்தவண்மேவி
யிருப்பதாமென்றும்புகன்றனைசிவசயிலேசன்
பொருப்புமேன்மையுமத்தலமகிமையும்புகல்வாய். (௰)

என்றுமாமுனிவரர்கடாமிசைத்திட்வியைந்தே
துன்றுமாதவச்சூதனுஞ்சடைமுடிதுளக்கி
நன்றுநன்றுநீர்வினவியதெனமுகநயவா
லின்றுகண்டபங்கயமலர்போன்றினிதியம்பும். (௰௧)

காதைகூறுவான்பொருட்டுளங்கனிந்தெழிற்கமலப்
போதன்மாலுருத்திரன்கலைமகள்புகர்முகவ
னாதிவேதவியாசரின்னோர்தமையகத்தில்
மாதவன்னினைந்தடிதொழுதெழுந்துவாய்மையினால். (௰௨)

வள்ளமானதிற்கடல்கடைந்தெடுத்துமுன்வைத்த
தெள்ளமுதெனச்செய்யவாய்மலர்ந்திவைசெப்பும்
வெள்ளவேலைசூழுலகெலாம்நலம்பெறவேண்டி
யுள்ளநீவிருநயந்தமைவினவினீருரைப்பேம். (௰௩)

என்னமாதவர்பரவசமடைந்தினிருப்ப
நன்னுதலுமைபரமகல்யாணிநாயகரை
யுன்னிநெஞ்சினிற்சிறிதுபோழ்திருந்துமெய்புணர்வாற்
றன்னிருகரங்குவித்துமெய்ப்புளகங்கடரவே. (௰௪

இருந்துசூதனுமியம்புவான்சிவசயிலேசன்
பொருந்துமத்தலமகிமையைக்கேட்டபுண்ணியமோர்
மருந்தெனப்பிறவிப்பிணிமாற்றிடும்வினைதா
னெரிந்திடுந்தழலிடுசருகாயிடுமென்றே. (௰௫)

அட்டமாசித்தியுதவிடுஞானமுண்டாகு
மிட்டகாமியந்தருஞ்சம்போசிவசயிலேச
கட்டெழிற்கலியாணிநாயகவெனக்கருதி
நெட்டுருச்செயுமந்திரமூன்றையுமிகழ்த்தும். (௰௬)

ஒருமையாகவிம்மந்திரமூன்றுமுச்சரிப்போர்
தருமமோடர்த்தகாமமும்பெறுவதுசரத

மருமையாகியமூன் றுலகமும்வசமாகும்
பெருமையாகவும்விளங்கியபிரணவத்துடனே. (௧எ)

சித்திபஞ்செபஞ்செய்துளோர்தமக்குசித்தியமா
முத்திவீட்டையுமுதலிடுமீதலால்மொழிவேஞ்
சத்தியாங்கலியாணிநாயகசிவசம்போ
வத்திரிமுனிபூசிதவென்றனுதினமும். (௧அ)

மூன்றுநாமமுஞ்செபஞ்செய்வோர்முத்தராயிடுவர்
கூன்றயங்குவெண்பிறைமுடிச்சடையுடைக்குழகர்
சான்றதாகியெவ்வுலகமுந்தருஞ்சயிலேசர்க்
கேன்றநாமங்கள்பன்னிரண்டாமகுதிசைப்பாம். (௧௯)

வாலையாகியபரமகல்யாணிதன்மவுணன்
காலனையுதைத்திடுபதன்சிவன்கங்காதரனே
பாலலோசனன்சந்திரசடாதரன்பகரு
மேலவாயிலன்கடனைபூடணனெனவிளங்கும். (உ௦)

அத்திரிமுனிபூசிததாளரவிந்தன்
மொய்த்தபொன்னிறமேனியனீலமுமுகந்த
வித்துருமமாமேனியன்கோரக்கர்காண்போ
னித்திருப்பெயர்பன்னிரண்டாகவேயிருக்கும். (உ௧)

இந்தநாமங்கள்பன்னிரண்டினையும்யாரேனும்
புந்தியாலனுதினந்திரிகாலமும்புகன்று
சிந்தைசெய்பவரிகத்திலேபோகமுஞ்சிறந்தே
யந்தியத்தினிற்பரகதிவீடுசென்றடைவார். (உஉ)

(வேறு)

கொச்சகக்கலிப்பா.

அவனிதனிலுள்ளசிவசேத்திரங்களனைத்தினிலுஞ்
சிவசயிலமெனும்பெயருந்திருவாயிற்குடதிசையும்
நவமிகுந்துவருங்கடனைநதிக்கழகாயிருப்பதுவுஞ்
சவுனகராதியரேயத்தலம்போலெங்கணுமுளதோ. (உ௩)

நதிகளுக்குள்ளேவருணைநாயகம்போன்றதுபோலும்
வீதி முதலாந்தேவருக்குள்விண்டுமகத்துவம்போலு

மதியுடையமாதவர்க்குள்வசிட்டர்பெருமையைப்போலு
மதிகபதிவிரதமின்னார்க்கருந்ததிமுக்கியம்போலும். (உச)

தருவினத்திற்போதிசலாக்கியம்போலுஞ்சதுர்ப்பாத
மிருகமதிற்கோவினங்கள்விளங்குதல்போலும்பசும்பொன்
னரியவுலோகங்களுக்குள்ளதிகம்போலும்புவியிற்
பெரியதானத்தபயப்பிரதானந்தனைப்போலும். (உரு)

சங்கரநாமங்களுக்குட்சம்புசிறந்ததுபோலுங்
கங்குலவுபறவைகளிற்கலுழன்மகிமையைப்போலும்
பொங்கரவாபரணனுறைபுண்ணியசேத்திரங்களுக்குள்
திங்கண்முடிப்பெருமான்வாழ்சிவசயிலஞ்சிறந்திருக்கும். (உசு)

கொலைகளவுகட்காமங்குருநிந்தைமுதலாய
வலகில்பெரும்பாதகஞ்செய்தவரேனும்புத்தியினாற்
றலவாசமோரிரவத்தலத்தில்வசித்திடிற்பரிதி
நிலவிவரிலிருட்போலநீங்கிடுமப்பாதகமே. (உஎ)

அத்தலத்தைப்போலுலகிலருட்குலவுதலமுமில்லை
நித்தியமாஞ்சிவசயிலநேர்மையுரைத்திடிலெளிதோ
பத்தியுடன்பதினான்குபருவமெட்டாந்திதியுடனே
மத்தியமாவாசியயனவகையிரண்டுவிசுவிரண்டு. (உஅ)

இரவிமதிகிரகணங்களிரண்டுவிட்ணுபதிகாலம்
புரையில்சடசீதியுடன்புண்ணியகாலங்களினுந்
தரையிலெவரேனும்வருதண்கடனாநதிதனிலே
யுரைசிறந்தமந்திரவிதியுடன்மூழ்கியெழுந்திருந்தே. (உகூ)

இமையவர்க்கும்பிதிர்களுக்குமிருடிகட்குமுவப்பதுவா
யமைவினதிப்புனலெடுத்தெள்ளச்சுதத்தாற்றருப்பணித்துத்
தமதுபொருளேதேனுந்தானமறையவர்க்குதவி
யுமையொருபாகத்தனமர்ந்துறைந்திடுமாலயம்புகுந்தே. (௩0)

முச்சடையின்சுயம்பாகமுளைத்தசிவக்குறிதனிலே
நிச்சயமூர்த்திகராயுநித்தியராகியுநிகரில்
பச்சிமத்தின்முகமாயும்பதினாறுவுடையாள்சேர்ந்
தெச்செகமும்புரப்பவராயிருந்தசிவசயிலபதி. (௩க)

திருவடித்தாமரைதொழுதுதெரிசனைசெய்திடுமவர்க்கு
மருவுபுத்தியபுத்தியினல்வந்தபெரும்பாவமெல்லா
மொருவிடுமெப்படியேமூன் றுலகினுக்குண்ணுயகியி
ரிருபுயத்தளாய்க்கருணைபிரங்குவிசாலாட்சியுமாய். (௩உ)

குடமுகமாயிருப்பவளாய்க்கோதின்மகாதேவியுமாய்ச்
சுடர்விடுமங்குசபாசந்துலங்குதளிர்க்கரமிரண்டி
னுடனபையவரதகரமோரிரண்டுமுடையவளாய்
மடல்விரிந்தசெம்பரத்தமலர்போன் றமேனியளாய். (௩௩)

பூரணசந்திரனுதயம்போல்வதனமுடையவளாய்க்
கூரிலகுமின்னெழுங்குகொண்டசிறத்தினளாயு
மோர்விழிக்குமன தினுக்குமின்புதவுமேனியளாய்த்
தாரிலகுகுழலிலிளந்தண்பிறையைமுடித்தவளாய். (௩௪)

கோமளமாயிருப்பவளாய்க்குழற்சுருண்டகுணங்காட்டி
மாமழைபோலிருண்டகுழன் மருங்குகருவண்டொழுங்காய்க்
காமர்பெறப்பின்னிவிட்டகவினையுடையவளாயுந்
தூமணிக்காந்தியைநிகர்த்துத்துலங்குமுகத்தினளாயும். (௩௫)

புதியகுங்குமச்சேறுபோன் றநிறமுடையவளா
யதியொளியாடியைப்போலவழகுகபோலத்தினளாய்
மதுரிதப்புன்னகைவிளங்கிவயங்கதரத்தளிரினளாய்ச்
சுதைவளைபோல்மிடற்றினளாய்சுமங்களமாயிருப்பவளாய். (௩௬)

வனத்தைவிட்டுமேலெழும்புவனசவரும்பெனத்திரண்ட
தனத்தையுடையவளாயுந்தயாபரியாகவுமிருக்குங்
கனித்துவர்வாய்ப்பரமகலியாணியையுஞ்சேவைசெய்வோர்
மனித்தவுருவொழித்திமையோர்வடிவுறுதற்கையமின்றே. (௩௭)

வரமுதவிக்கலியாணவாழ்வுதருமலைமகளாம்
பரமகலியாணிபதம்பலநாளுந்திரிகாலந்
தெரிசனைசெய்திடுவரிட்டசித்தியுடனடைவரிது
சரதம்வரமுனிவரரேசத்தியஞ்சத்தியந்தானே. (௩௮)

சித்தியுதவிடும்பெருமைச்சிவசயிலந்தனிலன்பாய்
நித்தியமாதவன்பிரமனெடுவிசும்புளோரெவரும்

பத்தியினாற்பூசிக்கும்பரம்பொருளங்கிருப்பதுவு
மத்திரிமாமுனிவரனுக்கனுக்கிரகநிமித்தியமே. (௩௬)

சிவசயிலநாதருக்குந்தெசரதராமீசுரர்க்கும்
பவமுயிர்கட்கறமாற்றும்பரமர்வன்னியப்பருக்கு
முவமனில்லாமலையவெற்பிலுறைபாவவினாசருக்குங்
குவலயத்திற்புகல்வர்பஞ்சக்குரோசமத்திதேயமென்றே. (௪0)

அவ்விடத்தில்வசித்திருந்தோராரேனுமவணீங்கி
வெவ்விடத்திற்போயிறந்தாரெனினுமுருத்திரராவர்
ஒவ்வரியதவங்கள்பண்ணியுள்ளளவுமதில்வசிப்போர்
திவ்வியமாமுருத்திரபதஞ்சேர்வதனுக்கையமின்றே. (௪௧)

அத்தலத்தின்மறைபவர்செய்யாகுதியுமருந்தவசு
முத்தமதானமும்பகரிலொன்றுபலகோடியதாங்
குத்திரம்பொய்வசனம்நன்றிகுன்றினவன்குருத்துரோகி
சத்தியமில்லானிரக்கத்தன்மைதிலமளவுமில்லான். (௪௨)

ஈங்கிவைகளுயிர்கடமக்கியற்றினவனிவர்களெல்லா
மாங்கிருந்துகொடுமைசெய்தாலடையாரச்சவுக்கியத்தைப்
பாங்குதருஞ்சிவசயிலப்பதியிலுள்ளோர்க்கொருக்காலுந்
தீங்குவரும்புத்திவரச்செய்யாதுமெய்யாமே. (௪௩)

உரைசெயுமத்தலத்திலுக்கையோசனைக்குட்பட்டதெல்லாம்
புரையிறவமகிமைகள்சேர்புண்ணியபூமியதாயுஞ்
சுரபியின்பால்போன்றபரிசுத்தமாயுயர்கயிலை
வரையைநிகராகுமதன்மத்தியதேயங்களெல்லாம். (௪௪)

அத்தலங்கடனில்வசிப்போரமரரதற்கையமில்லை
யுத்தமமாஞ்சிவசயிலத்தொருமாதம்வசிப்பவர்கள்
நித்தியமாஞ்சிவபதத்திநிலைபெறுவர்தினம்வசிப்போர்
முத்தரவர்பெருமைதனைமொழிந்திடவுமுடியாதே. (௪௫)

சடைமவுலிச்சிவசயிலத்தனிமுதலைச்சிவதீட்சை
யுடையபிராமணராயுமுரைத்திடுமாகமவசனப்
படிபூசிப்பவர்சயிலபதியாகையாலவரைப்
புடவியிலுள்ளோர்பூசைபுரிந்திடயோக்கியராமே (௪௬)

அத்தலத்திற்சிரணவுத்தாரணங்கள்பண்ணினவர்
நித்தியராயவர்மனதினினைத்தயாவையுமடைவர்
பத்தியாய்ச்சிவசயிலபதிபூசைநடத்தினவர்
சித்திசகலதுமடைவர்தினஞ்சிறிதிலினம்புகல்வேம் (சஎ)

வித்தகமாமுனிவரரேவிளங்கியவத்தலமேன்மை
சத்தியமாய்ப்புகன்றிடுவாஞ்சயிலேசர்பெருமைதனை
யித்தனையென்றுரைத்திடுவாரெவருமில்லைச்சுருதிகள்பூ
சித்திடுபாதாரவிந்தச்சிவனவராகையினாலே (சஅ)

ஆயிரநாவையுடையவனந்தபகவான்றனக்குந்
தோயுமோநூறாண்டிற்சொல்லமுடியாதுநடு
நாயகம்போன்றுலகினுக்குநலங்குலவுஞ்சிவசயிலத்
தூயதலமகத்துவமியாஞ்சொல்லுவதற்கெளிதாமோ. (சகூ)

அன்புடனத்தலமகிமையடிக்கடிகேட்டிடுவோரு
மின்புடனக்கதைவாசித்திடுமறையோர்முதலெவரு
மின்புரையுஞ்சடைமுனிவர்வியாபகராகியும்பசுஞ்செம்
பொன்களினாற்சகலபுவனமும்போற்றும்புண்ணியராம். (ருய)

என்றுபிரமாண்டபுராணத்திலேயெடுத்தியம்பி
யொன்றுசிவரகசியகண்டத்திலுரைத்திடுகின்ற
நன்றுதருஞ்சிவசயிலநாதர்தலப்பெருமைகளைத்
துன்றுசடாடவிமவுலிச்[illegible]முனிவரர்க்கிசைத்தான். (ருக)

தலவிசேடச்சருக்கம்முற்றிறறு.

---

ஆகத்திருவிருத்தங்கள் ாருப

# இரண்டாவது தீர்த்தவிசேடச்சருக்கம்.

கொச்சகக்கலிப்பா.

மாதவத்தோர்கேட்டுமனமகிழ்ந்துகளிசிறந்திடவே
சூதனையின்புறநோக்கித்தொன்னெறிவல்லவனூனப்
போதநெடுங்கடலனையபுண்ணியா சிவசயிலக்
காதையின்னங்கேட்டுணருங்கருத்தினராயினமென்றே. (க)

ஊனதுமுகதாமரையிலுதித்துவருஞ்செழுநறவ
மனையசிவகதையுலகமனைத்தினிலுமுள்ளவுயிர்
மனதினுக்குஞ்செவிக்குமின்பம்வழங்குவதையாகிதமும்
வினவிடநீபுகன்றுமெங்கள்விருப்பமடங்கினதிலையால். (உ)

அன்னையுமைபரமகலியாணிபிரியாதவராய்
முன்னையராய்ப்பரம்பொருளாய்முளைத்தசிவசயிலபதி
யென்னுமவர்தலமகிமையாங்கேட்கக்கேட்கவொளிர்
பொன்னவிருஞ்சடைமுனிவாபுதிதாகயிருப்பதுவே. (ந)

சிவசயிலமெனும்பேராற்சிறந்தபருப்பதவீறும்
தவமகிமையுடையவராய்ச்சற்குலராய்விருத்தருமா
யவனியெல்லாமதிப்பவராயத்திரிமுனிபெருமையும்வே
றுவமனிலாதவர்சீடனுடையவருந்தவம்பேரும். (ச)

சகலகலைவல்லவராய்த்தலத்தினர்சிரோமணியா
யகிலபுவனமுந்துதிக்குமத்ரிமுனிசெய்தவசின்
மகிமையுமெய்த்தவப்பயனால்மங்கையுடன்பிறப்பிறப்பாம்
பகையொழியச்சிவசயிலபதியவர்க்குமுன்னின்றார். (ரு)

அப்படிமுன்னின்றசிவனமர்தலத்தின்மகத்துவத்தை
யிப்படியிற்குறைகளில்லாதெமக்கருள்செய்திடவேண்டு
மொப்பரியசிவத்தியானமுண்டாவதாமகிமை
செப்புவதற்கதிகாரியாகவுலகினிற்சிறந்த (சா)

என்னமுனிவரர்புகலச்சூதன்மனமியைந்து
பன்னலஞ்சேர்திரிகூடப்பருப்பதமொன்றுண்டமரர்

பொன்னுலகளாவியதுபொருப்புகளுக்குத்தமமா
மிந்நிலத்திலதன்பெருமையாவர்தெரிந்துரைக்கவல்லார். (எ)

இருப்பொளிகளையும்நல்லிரசதத்தினொளியாயும்
பொருப்பினுடைக்கொடுமுடிகள்பொலிந்திருக்குமதினுடைய
பரப்பளவுமுயர்ச்சியுமிப்படியெனலாயறிவரிது
தருப்பலவும்வளப்பலவுந்தாங்கவலங்கரித்திருக்கும். (அ)

(வேறு)

கலிவிருத்தம்.

செம்பொன்மேருவெனுந்திரிகூடத்திற்
கொம்பர்வீசுங்குளிர்பொழிலெங்கணும்
வம்பலர்புன்னைபூத்துவயங்கிய
தும்பர்வானத்துடுக்கணிகர்க்குமால். (௯)

பூங்குமிழ்கள்விரிந்துபொலந்திகழ்
தேங்கமழலர்மாழையிற்சிந்துவ
கோங்குகள்பொன்கொடுப்பவர்போலவே
வாங்குவர்கரம்போன்றதுமாந்தளிர். (௰)

விட்புலன்றொடமேவுபனசத்தின்
முட்புறக்கனிமொய்த்திருக்கின்றது
கட்புதுமலர்க்காவடிதாங்கிய
பெட்புறுமடியாரிற்பிறங்குமால். (௰க)

சோதிமாமரம்நின்றொளிர்தோற்றங்க
ணீதிமாலயனீண்முடிசேவடிப்
போதுதேடியபொங்கழல்மேனியா
யாதிநின்றதுபோன்றனவாகுமால். (௰உ)

சாதியானதருக்களில்வண்டின
மோதியம்மலர்க்கள்ளுண்டுமுன்கணிப்
போதினைக்கண்டொதுங்கும்புலையர்போல்
வேதியர்நிகரர்யினவேங்கைகள். (௰௩)

திங்கள்மண்டலஞ்சென்னியிற்சூடலால்
மங்குமேருயும்வரையிடம்வாழ்தலாற்
பொங்கரவம்புனைந்துகிடத்தலாற்
சங்கரனிகர்சந்தனச்சோலையே. (யச)

செண்பகங்குழைசேர்ந்துகொப்பாட்டலாற்
கண்கவர்துண்டங்காட்டிவயங்கலால்
வண்கொடியிடைதோற்றிமலைவளர்
பெண்கொடிகளைப்போலப்பிறங்குமால். (யரு)

மாகமூடுவளர்ந்துநின்றோங்கிய
பூகம்பாளைவிரித்தலர்பூவினை
லோங்கயோடுகவிக்குலமொன்றுக்கொண்
ருகமீதுகவரியசைக்குமால். (யசா)

வன்னமர்மயிலாடக்குயிலின
மின்னிசையினிற்பாடவெழிலளி
துன்னியேசுதிகூட்டவியப்பபோற்
றென்னமாமரஞ்சென்னியசைக்குமால். (யஎ)

ஓங்குதண்பொழிலெங்குமுலாவியே
பாங்கிருந்துமடக்கவிபார்த்திட
மாங்கனிகளைமற்கடங்கைகளா
லாங்கிருந்துகொண்டம்மனையாடுமால். (யஅ)

வராசலத்திரிகூடத்தில்வைகுறுஞ்
சராசரப்பிணிநீக்குஞ்சஞ்சீவியா
விராமனெய்தபுண்ணுற்றவெழுந்துயர்
மராமரங்களும்வந்தனபோலுமால். (யகூ)

கூவிளங்கள்குளிர்தழையாடியே
மேவிமுக்கவர்விட்டொளிர்கின்றது
மூவிலைச்சூலமுன்கையிலேந்திய
சேவினாயகனென்னத்திகழுமால். (உய)

கோதிறண்பொழிலெங்கணுங்குப்புற
மாதுளங்கனிகொம்பில்வயங்குவ

ஞூதநற்றழைசூட்டுபொற்கும்பங்கள்
பூதலமங்கைகாட்டுவபோன்றிடும். (உக)

குந்துருக்கங்கொடுத்திடுதூபம்போற்
கந்தங்காட்டிக்கடனையிற்றண்மலர்
சிந்தியேயத்தெளிபுனற்கங்கைக்கு
மந்திரத்தொடருச்சித்தவாறொக்கும். (உஉ)

கன்னிவாழைகமுகுடன்பூவிரி
தென்னைமூன்றுஞ்செறிந்துவிண்ணீண்டது
பொன்னிலம்மிடிந்தின்னிலம்போந்திடு
மென்னநாட்டியதம்பமுமேயுமால். (உங

ஏத்தன்வாழையிருவிசும்பீண்டியே
காய்த்தபூக்குலைகாட்டியகாட்சிகள்
வாய்த்தவான்மண்டபத்தில்வகுப்பதாய்ப்
பூத்தலையிட்டபோதியல்போன்றிடும். (உச)

சந்திமுற்றன்னிலதைசதுர்ப்புறம்
பந்தஞ்செய்திடுபாசம்நிகர்ப்பதாய்
மந்திகள்கிளைதன்னில்வதிவது
விந்தையாடியவேழம்பரொக்குமால். (உரு)

கூந்தற்பெண்ணைகுழாங்குழாமாகவே
சேர்ந்துநிற்பதுசெய்யசடைவிரித்
தேய்ந்தவெண்பொடிமேனியிலேந்தியே
வாய்ந்தமாதவர்தங்களைமானுமால். (உ[illegible])

கள்ளுலாமலர்க்காவணமெங்கணும்
வெள்ளிலங்கனிமீதுமுள்ளேறுண்டு
புள்ளிகாட்டுதல்போகமின்னார்தன
வள்ளமீதில்வடுக்கணிகர்த்தவே. (உஎ)

பொருப்பிலுள்ளபுனற்சுனையெங்கணு
மருப்பொதியும்வனசமலரில்வண்
டிருப்பதுகங்கையாள்முகத்தேர்பெறத்
தரித்தமைமறுப்போலத்தயங்குமால். (உஅ)

புனஞ்சுமந்தபொருப்பிலருவிகள்
கனஞ்சுமந்தகனங்குழைமாதரார்
தனஞ்சுமந்துதயங்கிவயங்கவே
வணிந்திடுமுத்துமாலைகள்போன்றிடும். (உகூ)

வானமுற்றவரைதிரிகூடத்தில்
மேன்மையுற்றுவிளங்கொளிகாட்டவே
ஞானம்பெற்றமுனிகள்நனியலா
லானைபெற்றமுனிகளனேகமே. (௩0)

தோன்றிடாதபடுகுழித்துன்பங்க
ளேன்றிடுமென்றினங்களைப்பின்விட்டு
நான்றகையினில்நற்றடிபற்றியே
யூன்றியூன்றியுலாவுமதகரி. (௩க)

பொருப்பில்வாழும்புனற்குறமாதரார்
விருப்பினாலும்பொசித்திடவேண்டியே
கருப்பிறங்கலைப்போன்றமதகரி
மருப்பினாற்கல்லிவள்ளியெடுப்பரே. (௩உ)

கொடியரிசனம்நாபிநெய்கோதில்பூத்
துடியிலவங்கமாரந்தூய்நானமுங்
கடிகமழ்தரக்காட்டிவசந்தனுங்
குடியிருப்பதுவாந்திரிகூடமே. (௩௩)

இப்படிப்பல்வளங்களுமேந்தியே
யொப்பிலாதபெருமையுமுள்ளதா
யப்புவேணியர்க்கற்புதமான தாய்ச்
செப்புதற்கரிதாந்திரிகூடமே. (௩௪)

(வேறு)

அறுசீர்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அத்திரிகூடமேவுமரசுவாவொன்றைவன்மீ
னத்துலாநதியிற்பற்றநடுங்கியுள்ளொடுங்கியேதன்
சித்தமுங்கலங்கிவேறோர்செயலின்றித்திகைத்தொன்றே
துமாய்த்திடுந்துயராலாதிமூலமென்றழைத்தபோது. (௩௫)

மாசுறுகராவைக்கொன்றுமதகரிதன்னைக்காத்துக்
கேசவன்புரந்ததாலேகெசேந்திரமோட்சமென்றே
தேசுடைப்பதியொன்றுண்டுதிரிகூடவரையில்மேவு
மாசிலாமுனிசிரேட்டரத்திரிமுனிவரென்பார். (௩௬)

காலமூன்றுணர்ந்தஞானக்கருத்தராய்ச்சீடரோடுஞ்
சீலமும்வனப்புமுள்ளத்தேர்ச்சியுந்தெளிவுமிக்கா
ளாலிலையுதிரம்போன்றயனசூயைமனைவியென்னு
மேலவார்குழலியோடுமில்லறம்புரிந்துவாழ்ந்தே. (௩௭)

(வேறு)

கலிவிருத்தம்.

இருக்குநாட்கோரக்கரென்னுஞ்சீடனு
மிருக்குமாமுனிவனையிறைஞ்சியேத்தியே
பெருக்குநீர்க்கங்கைசென்றாடிப்பெற்றியோய்
பொருக்கெனமீள்துமென்றுரைத்தபோழ்தினில். (௩௮)

மாமுனிசீடனைவதனம்நோக்கியே
நீமனமகிழ்வதாய்நிகரில்கங்கையை
யாமிவண்தருதுமென்றினிமையாகவே
வாமமார்வருணையைமனதினுன்னினான். (௩௯)

அக்கணம்வாருணையணங்கும்வெய்தினிற்
றெக்கணத்துயர்திரிகூடவெற்பினிற்
புக்கனள்நான்முகன்புதல்வனத்திரி
மிக்கமாதவன்மனம்வியப்பதாயினான். (௪௰)

விரும்புகோரட்சகன்பொருட்டுமேதினி
பெரும்பயனடைந்தெழில்பெருவதாகவச்
சுரும்படைகுழலனசூயைதன்னொடு
மிரும்புனற்கங்கையங்கிருப்பதாயினள். (௪௧)

அவ்வயினெடிதுநாளமர்ந்துகங்கையுந்
திவ்வியமுனிவனத்திரியைநோக்கியே
யெவ்வமின்மாதவயானின்னேவலாற்
பவ்வமேவுதுமெனப்பகர்ந்தபோதினில். (௪௨)

(வேறு)

அறுசீர்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அம்முனியிருந்துவாழுமாச்சிரமத்தின்பாங்கர்
தம்முடைப்பேரதாகத்தண்டத்தால்நிலனைக்கீண்டக்
கம்முடைத்தெழுந்துபொங்கிக்கரைபுரண்டொழுகியாங்குப்
பொம்மெனவருதல்நோக்கிப்புந்தியாற்சிந்தைசெய்தே. (சங)

வரமுனியுவப்பதாய்முன்வந்திடுங்கங்கைதன்னைக்
கரமுடைத்தண்டத்தாலேகண்டிடும்புனலிற்கூட்டி
விரவிடக்கற்பித்தேகவிட்டனர்கடனையென்று
பரவைசூழுலகமெல்லாம்பகர்ந்திடும்படியதாக. (சச)

(வேறு)

கலிவிருத்தம்.

வருணையைமுனிவரனோக்கிவாய்மையா
லருணிறைகடனையென்றவனிகூறிட்
யிருநிலந்தனின்மகப்திதிக்கெய்தியே
குரைகடலடைகுதியெனவுங்கூறினான். (சரு)

அத்திரிமுனியனுக்கிரகத்தாலுமே
புத்தமுதனையதண்புனன்மிக்கோங்கவே
யுத்தமக்கடனையென்றுலகங்கூறிட
வித்தகநதியதாய்விரைவிற்போந்தனள். (சசா)

இருகரைதனிலுங்கோங்கிருப்பைபூகமா
மருதுதேங்கதவுமாதுளைபுன்னாகமுங்
குருகுடன்பனசங்கூவிளநற்போதியும்
விரிமடற்கேதகைவெள்ளினீபமும். (சஎ)

சந்தனமகிறமரத்தம்வேங்கையுங்
குந்துருக்கம்வெதிர்கூந்தற்றாலமு
மிந்தநற்றருவனமிடைவதேர்நலந்
தந்திடுபணிதிபின்றகைமைகாட்டவே. (சஅ)

அரனுறையாலயமரிதன்றலைய
மிருகரைதனிலுளதெண்ணிலாதன
மருவிடவமரர்மாதவர்கள்போற்றவே
விரிபுனற்கடனையும்விளங்கித்தோன்றினள். (சக)

புத்திரர்தமையன்னைபுரக்குமாறுபோ
லித்தலத்துயிர்களுக்கின்றதாயெனச்
சுத்தமும்புரத்தலுந்துலன்றிக்காதலா
யத்திசேர்ந்திடவவயவங்கள்காட்டியே. (ருய)

கருணைவாழ்முகமருக்கமலப்போதென
வரிவிழிகுவளைமாமலரதாய்க்குழல்
கருநிறவளிமிசைகாவதென்பதா
யிருதனநேமிப்புள்ளெனவுந்தோன்றவே. (ருக)

வரையிழிந்தவனிமேல்வந்தநன்னதி
பரலெனநவமணிபரத்தியுள்ளுற
விரவியகுடவளைவிளங்குகண்டமாய்க்
கரைபுரண்டொழுகினள்கடனைமங்கையே. (ருஉ)

வித்துருமங்கள்மெல்லிதழைக்காட்டியே
தத்தலையிருகரைதன்னிலெங்கணும்
நித்திலமொதுங்கியேநிலவின்றிடும்
பத்திகள்நகையெனப்பகரலாகுமால். (ருங)

அரம்பையின்குலங்குறங்காகவாங்கமர்
மரங்களிற்குரங்கினம்வதியுஞ்சாம்பசுந்
தரமுழந்தாளெனத்துவன்றத்தணைவிடை
பரந்தெழுமலவனும்பரடுபோலுமால (ருச)

தருநிழல்புனலிடைதயங்கியாடுவ
திருபதம்பெயர்த்தனமேகுவாரதாய்த்
திரையிருகரமெனச்சிலம்புபுள்ளொலி
புரையறுமணிக்கலைபுலம்பல்போலுமால். (ருரு)

வேலையிரண்டினுமிடையுந்தண்ணிழற்
சோலைகள்விதமலருகுப்பத்தோன்றுதல்

நாலுவன்னங்களுநயந்தகோமளக்
கோலவற்கலையெனக்கூறலாகுமால். (௫௬)

செஞ்சிலைநுதலெனத்திரைகள்புற்புதம்
விஞ்சொளிப்படிகமாலிகையின்மிக்கதாய்
வஞ்சிகள்துவள்வதுமருங்குபோன்றடிப்
பஞ்செனச்சுதைநுரைபரந்துசெல்லுமால். (௫௭)

ஈசன்மால்நாமங்களினிமையாகவே
பேசினோர்பதவிகள்பெறுதல்போலுமே
காசினிதனில்வருங்கடனையாடினோர்
மாசறுத்துயர்கதிவழங்கவந்தனள். (௫௮)

இப்படிமகிமையும்வளமுமேந்தியே
மெய்ப்பொருள்வன்னிநாதருக்குமேற்கதாய்த்
துப்பெனத்திகழ்சடைச்சுந்தரேசர்பாங்
கப்புனற்கடனைதெற்கணுகிப்போயினாள். (௫௯)

வானவர்கோன்மகன்வாலிபூசித்த
ஞானவாலீசர்சன்னதியிற்பூருவம்
போனதாமதற்குத்தென்புறத்திற்புண்ணிய
தானமொன்றுளகயிலாயந்தானென. (௬௰)

பேசுமத்தலத்தினிற்பிரமநாதனைப்
பூசனையுக்தொறும்புரிவதன்றியு
மாசறுதவத்துரோமசனும்வைகலாங்
கீசனைப்பூசைசெய்திருப்பதாகுமால். (௬௧)

நிறங்கிளர்மணிபலநிதிகளோங்கிய
திறங்கள்பல்வளங்கள்நற்செல்வர்மல்கிய
தறங்கள்ஞானங்களாபரணமாகவே
பிறங்கியசதுர்மறைப்பிரமதேயமே. (௬௨)

அத்தலத்தமர்கயிலாயநாதருக்
குத்தரத்தினிதமர்ந்துறையுமாபரி
சுத்தசுவேதபுரீசர்தொன்மையாங்
கத்தர்க்குவடபுலங்கடனைபோயினாள். (௬௩)

குடவளைகுமுறிடவலையின்கோசிப்பாற்
கடலொலிகரந்திடக்கடிதுபொங்கியே
நடவியகடனைநன்னதியின்வேகத்தைப்
புடைமருதீசனும்புரிந்துநோக்கியே. (சுச)

தென்குடதிசையினிற்செல்லுமாநதி
யின்கடுப்பொடுங்கலில்லென்றுசிறலுந்
தன்கடுப்பமர்ந்தவண்டங்கிவேகமும்
பின்படநின்றனள்பெரிதுகாலமே. (சுரு)

இப்படிக்கடனையுமிருந்துமாமரு
தப்பனைமேனிசாய்ந்திடுமெம்மண்ணலைச்
செப்பனையாவுடைத்தேவிபாகனைத்
துப்பிதழ்வாயினாற்றுதிப்பதாயினள். (சுசு)

(வேறு)

கலித்துறை.

தேவர்தேவனே திருப்புடைமருதுறைசிவனே
மூவகையுலகுக்கெலாமொருமுழுமுதலே
பாவைபார்ப்பதிநாயகபணியுமன்பருக்கே
யாவையுந்தருமிறைவனின்னிணையடிசரணம். (சுஎ)

(வேறு)

கலிவிருத்தம்.

தன்வயமேனிதூய்தாயும்பாசங்க
ளின்மைமுற்றுணர்வியல்பறிவெய்யாப்பிலன்
மன்னுபேரருளின்பமாசிலெண்குண
மின்னதாம்புடைமருதீசபோற்றியே. (சுஅ)

இன்னணம்பலதுதியெடுத்துக்கூறியே
தன்னுணர்வான்மலரடியிற்றாழ்தலும்
பொன்னவிர்சடைப்புடைமருதின்மேவிய
முன்னவன்கடனைதன்முகத்தைநோக்கியே. (சுகூ)

புண்ணியக்குருமுனிபொதியைவெற்பினி
னண்ணுங்காற்றும்பிரவன்னிநம்வயின்
மண்ணிடைவருவளவ்வரையுநின்றுநீ
யுண்ணெகிழ்ந்தளவளாயுடன்செல்வாயென்றே. (எ௰)

பொருப்புடைச்சிலையினாற்புரத்தைக்காய்ந்திடுந்
திருப்புடைமருதுறைசெல்வன்கூறலும்
விருப்புடைமனத்தளாய்க்கடனைமெய்த்தவ
மருப்புடன்செய்தவணமர்ந்துவைகினாள். (எக)

காலமுனெடிதினிற்கழிந்தபின்னவண்
சாலவும்போந்தனள்தாம்பிரபன்னியு
மூலமாங்கடனையுமுகந்துகூடியே
வேலைசென்றடைவதாய்விரைவிற்போயினாள். (எஉ)

(வேறு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்தவாறெழுந்துபொங்கியிரும்புனற்பெருக்கியாங்கே
வந்திடுங்கடனையாற்றின்மகிமையாருரைக்கவல்லார்
செந்தழல்வேள்விதானந்தீர்த்தமுமதிற்செய்தோர்கள்
பந்தவல்வினைகணீங்கிப்பரகதியடைவர்திண்ணம். (எங)

பூசமாமோரைகங்கைபோந்தநாளாகையாலே
தேசுடைமகரபூசத்தீர்த்தமேமுக்கியமென்று
பேசுவர்முனிவராற்றின்பெருமைகள்மிகவுமுண்டு
மாசிலாயோகவித்தாம்வரமுனிசீடனென்பான். (எச)

(வேறு)

கலிவிருத்தம்.

கோதில்கோரெட்சகன்குருவதாகிய
வாதிமாதவரெனுமத்ரிமாமுனி
பாதபூசனைகளும்பணியுஞ்செய்திட
மூதறிவுடையமாமுனியும்வைகியே. (எரு)

உயிர்விசாரங்களையுன்னிவாழுநாட்
செயிரறுமலையமாஞ்சிகரமேவியே

யுபர்தவக்குறுமுனியுததியுண்டவன்
பெயரினில்மனஞ்செலப்பிரியமாகியே. (எசு)

கடமுனிவரன்றனைக்காணவேணுமென்
றுடனெழுந்தருளினுருடையசீடர்பின்
றெடரவான்விளங்கியசோதிமொய்த்திடும்
வடவரைதனைநிகர்மலையமேவினர். (எஎ)

பாவவினசர்தம்பாதம்போற்றியே
சேவைசெய்தாங்கமர்தெய்வமாமுனி
மூவுலகேத்திடுமுனிசிரேட்டனுய்
மேவியகும்பனைவியந்துகண்டபின். (எஅ)

அண்ணலைப்பாவவினாசராகிய
புண்ணியப்பொருளைமெய்ப்பொருளைப்பொற்புறு
கண்ணுதறனையின்பக்கருணைவாழ்வினை
மண்ணுறவெட்டஞ்சுவகையிற்போற்றியே. (எகூ)

எழுந்துசெஞ்சடைமிசையிருகைகூப்பியே
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்கிடச்
செழுந்திருவிழிபுனற்சிந்தவின்பத்தி
லழுந்தியேமெய்பரவசமுமாகியே. (அம)

(வேறு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உமையொருபாகாபோற்றியுயிர்க்கின்பமளிப்பாய்போற்றி
யமைவில்விசேடமானவறிவுசொரூபாபோற்றி
விமலனேயுயிர்கட்கெல்லாம்விசுவசசாட்சியாகி
யிமையவர்போற்றிநின்றயிறைவனேபோற்றிபோற்றி. (அக)

மூன்றுலகுக்குநாதமுதல்வனேபோற்றி:இந்த
மூன்றுலகுருவாய்நின்றமுன்னவாபோற்றிஞானந்
தோன்றியவடிவாபோற்றிசுயம்பிரகாசாபோற்றி
யூன்றுவிகாரமில்லாவொருவனேபோற்றிபோற்றி. (அஉ)

யென்றுபல்துதிகள்செய்தேயின்பவாரிதியிலாழ்ந்து
நின்றுமெய்மறந்துபோற்றுநிலைமைகண்டெழுந்துவெய்தின்

சென்றகத்தியருமாங்கத்திரிமுனிவரனைக்கண்டே
யொன்றியகருத்தாலுள்ளமுவந்து பூசனைகள்செய்தார். (அ௩)

இருக்கநற்றவிசுமீய்ந்தாண்டிருத்தியேயினிமையாக
வருக்கியமுதவிப்பாத்தியமளித்தாசமனமுநல்கி
மருக்கமழ்புட்பஜாதிவகைகளாலருச்சித்தேத்தித்
திருக்களாவுடையார்சன்னிதானத்திற்சிறிதுபோது. (அ௪)

இருவருமிருந்துநீங்காவின்பத்தையடைந்துதத்தம்
பரிவினல்விடைவினுவாய்ப்பாவவினசவீசர்
திருநகர்க்கதைகள்யாவுஞ்செவிப்புலன்குளிரக்கேட்டுப்
பொருவருமபெருமையோர்கள்புசித்தவணமர்ந்தகாலே. (அ௫)

அத்திரிமுனிவர்தாமுமாச்சிரமத்திற்கேகும்
புத்தியராகித்தெய்வப்பொதியமாமுனிவன்றன்னைத்
துத்தியமாகப்பேசிவிடைகொண்டுசுருதிபோற்றும்
நித்தியமுக்களாவினிமலரைத்தொழுதுபோற்றி. (அ௬)

சேடரோடெழுந்துபோந்துதிரிகூடவரையைச்சார்ந்து
நீடருங்காலம்வைகிநிலைமையாய்வசித்தாரென்று
நாடருந்தவத்தின்மிக்கநயிமசாரணியந்தன்னிற்
கூடியமுனிவர்க்கெல்லாஞ்சூதனுங்கூறலுற்றுன். (அ௭)

அந்நிலையுடையாரானவத்திரிமுனிவர்காணப்
பன்னகாபரணன்முக்கட்பரமனுஞ்சயிலநாதன்
முன்னுறவெழுந்தேயந்தமுனிவனுக்கனுக்கிரகித்த
தின்னமோர்கதையுண்டென்றேமுனிவரர்க்கிசைப்பதானுன் (அஅ

2-வது தீர்த்தமகிமைச்சருக்கம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தங்கள் உ௱௩௰அ

மூன்றாவது

# அத்திரிமாமுனி சுயம்புலிங்கதரிசனச் சருக்கம்.

கலித்துறை.

மெய்த்தவமாமுனிவரரேயத்திரிமாமுனியான்மவிசாரம்பண்ணி, யத்திரிகூடத்தினிலேயமர்ந்துவசித்திருந்திடுநாளவருக்காங்கே, சித்தநிலைகலங்கிடவோர்சஞ்சலமுமஞ்சனமுஞ்சிறிதுதோன்ற, வெய்த்துநெடுநோட்டவிசின்மனஞ்செலுத்திவிணிலுளேந்திருந்தோமென்றும். (க)

பயந்தருநற்றவசெனவேபதிந்துமனமதிற்செலுத்திப்பழக்கிஞேமோர், சுயம்புலிங்கதெரிசனமுமில்லாதுநெடுங்காலந்துலைந்ததென்றும், வியந்துவினையாதிகளிலழுந்துயிர்கள்கடைத்தேறவேண்டியன்றோ, வயன்றிருமாற்கரியபிரான்சுயம்புகளின்மூர்த்திகரமாகித்தோன்றும். (உ)

அப்பொருளின்பெருமைகளையறிவரிதுசுரபியுடலனைத்தும்வியாபித், தொப்பரியபான்முலையிலுதிப்பதுபோலுலகுவியாபகமாய்நின்ற, மெய்ப்பொருடான்சுயம்புகளில்வசித்திருப்பதாச்சரியம்விளம்புங்காலைச், செப்பரியமலையவரைக்குறுமுனிவரரியதவஞ்செய்ததாலே. (ந)

எக்காலும்பாவவிஞசச்சுயம்பின்வசித்திருக்குமிறைவராயு
மிக்கானதிருமணக்கோலத்துடனேகூடியநல்விமலராயு
மைக்கோதையிமயமலைமகளுமைபார்ப்பதிதணவாவரதராயு
மக்காரம்புனைபவரைமுக்காலந்தினஞ்சேவித்திருந்தாரென்றும்()

மிகவுமனக்கவலையுடன்முனிவரருஞ்சலித்திருக்கும்வேளைதன்னி, லகல்விசும்பிலொருவாக்குண்டாகியதுவாரீமத்திரியேநாமிந், நகமதிலனுதிசிவசயிலரெனவசித்திருப்பதெந்தநாளும், புகழ்பசுபம்புலிங்கந்னிர்மூர்த்தி கரமாகப்பொலிந்தோமென்றே

திருவாக்கின் றிரங்கேட்டேயத்திரிமாமுனிவரதிசயித்தாரிப் பாற், கருவாக்கும்பிறப்பிறப்பைக்கடந்திடுகோரட்சகரக்காலந் தன்னில், மருவாக்குமலர்சமித்துத்தருப்பைகளுங்கடனேமாந திக்குத்தென்பாற், றருவாக்கும்வனத்திடையாச்சிரமகுணபால்வி ரைவிற்றனித்துச்சென்றார். (சு)

அவ்வனத்திற்கடம்புபலாத்தென்னைவெள்ளிலாத்திதமரத்த ஞ்சூதஞ், செவ்விதிகழ்கமுகிருப்பைமாதுளங்கமெலுமிச்சை சிறந்தவில்வ, மிவ்வகையாந்தருக்கணிறைதண்கடனைத்தென்கரை யிலினிமையான, திவ்வியமாங்கனிகளுக்காச்சென்றளவிலிங்க மொன்றுசிறப்பக்கண்டார். (எ)

தருக்களினூற்றிசையுமறைத்திருப்பவாதிசிவசயிலராயு மருட்பொலியுஞ் சுயம்புலிங்கராகியுங்கோமளமாயுமங்கேதோன் றி, யிருப்பவரைக்கண்டுதெரிசித்துடம்புமிகப்பூரித்திடவேபோ ந்து, குருப்புனிதராகியவத்திரிமுனிக்குவகையாகக்கூறினரால்.

சீடன்மொழிதனைக்கேட்டுமுனிவரதிசயித்துமனஞ்செல்ல முன்னே, காடுகளிலுள்ளபலகண்டகங்கள்தனையோரார்கடிதிற் சென்றே, தேடறியமெய்ப்பொருளைச்சிவசயிலச்சிவக்கொழுந் தைத்திருமால்வேத, னுடரியவொருமுதலைச்சிவலிங்கவடிவாகநய ந்துகண்டார். (அ)

கண்டளவிலின்பவெள்ளக்கடல்பெருகிவழிந்திடவக்கடலின் மூழ்கி, விண்டவுரைகுழறிமயிர்சிலிர்ப்பவுடல்கம்பிதமாய்விழிநீர் சோரக், கொண்டபொறியைந்துகளுங்கட்பொறியின்வழிநிற்க க்கரங்கள்கூப்பி, மண்டியெழும்பரவசத்தாநெடுநேரமுனிவர் தமைமறந்துநின்றார். (ட)

நின்றுபரவசனீங்கிக்கண்களினாற்சிவக்குறியைநேரேநோ க்கி, யொன்றுகருத்தினரானார்பரமசிவன்புயநான்குமுரகப்பூணு, மென்றளிர்ப்பொற்கரமபயவரதமழுத்திரிசூலம்விளங்கவெள்ளிக், குன்றனையவிடைமீதிலுமையுடனேமுனிவர்முனங் குருகிநின்றார்.

தேவாதிதேவருமாய்ப்பார்ப்பதிசமேதருமாய்செனனமாய்த லோவாதபிணிக்குமருந்தினராய்ச்செங்கதிர்கோடியுதித்தமேனி யாவாராய்ச் சந்திரசடாதரராயிருசுடர்க்கணணதன்மேற்செந்தீக் கோவாருநுதலினராய்ச்செம்பொனிறச்சடைடவுலிக்குழகராயும்.

அம்மவுலிமீதிலரதனமவுலியலங்கரித்தவழகராயுஞ்
செம்மைதருநீலமணிகண்டருமாயுயர்திருமேனியினராயும்
வெம்மைதருபுண்டரிகத்தோலுடையராகிநின்றமெய்மைகண்டே
தம்மனதுபரவசமாயடியிலறுந்தருவினைப்போற்றரையில்வீழ்ந்தே

பரவசத்தையடைந்திடுமைம்பொறிகளுடனமக்கரித்துப்பார்த்துப்பார்த்தே, கரமெடுத்தஞ்சலிகூப்பிப்படிக்கடிவீழ்ந்தெழுந்து புனற்கண்கள்சோரப், புரமெரித்தபரம்பொருளையுயிர்ப்பூதமனைத்தினுக்கும்புகலதாஞ்சங், கரனைமிகுபத்தியுடன்வெகுவிதமாய்த்தோத்திரங்கள்கழறலுற்றார். (௰௪)

கங்காதராகருடகேதனனுமரிபரவுங்கருணையாளா
யிங்காழவுலகனைத்துமிசைக்கானமெடுத்தேற்றுமிறைவாதேவா
மங்காததவமுனிவர்நீங்காதுதெரிசனைசெய்வடிவாவேழை
பங்காளாகுமரர்திருவுளமகிழக்கிருபைசெயும்பரமபாதா. (௰௫)

சிசயிலப்பருப்பதத்தினடியிலெழுந்தருளிவளர்செல்வாகாந்தி
வீசுகயிலாயவெற்பில்விளையாடியினிதிருக்கும்விமலாவென்றுந்
தேசுதிகழருபத்துநாலுகலைகளும்நிறைந்ததேவேயன்பா
னேசமலைமகள்பாகம்பிரியாததனிமுதலேநிகரில்வாழ்வே. (௰௬)

கோலவடிவெடுத்துமுன்னுண்முரனெனும்வல்லசுரனையுங்கொன்றதுங்க, மாலவனுமலரவனுந்தேடரின்றபெருங்கருணைமலையேசெம்பொன், மேலுலகமாள்பவனுய்விருத்திராசுரன்பகையாம்வேந்தன்போற்றும், வாலமதிச்சடைமுடித்தோயதிவிருத்தியாகியமங்களங்களுள்ளோய். (௰௭)

அறவடிவாய்க்குணங்கள்குற்றமில்லாதமெய்ப்பொருளாயருள்மெஞ்ஞான, முறுமுருவாய்ச்சகளருமாய்நிட்களமாயவ்விரண்டுமுடையராகிச், சருவசெகதீசுரராயுயிர்களுக்குக்கர்மபலந்தருவாராகி, நிறைதருமாகமங்களினூற்பூசிக்கும்பெருங்கருணைநிகழும் வாழ்வே. (௰௮)

சருவசங்காருமாயுயிர்களுக்குநோவகற்றுந்தமரேநாளு, முறுபணிசெய்துமைப்போற்றுமடியவருக் குயிர்த்துணையேயுன்னைநெஞ்சிற், பெறுமவர்கள்பயமொழிக்கும்பேரொளியேயு

னைத்தியானம்பிரியாதாற்கு, மறுவில்சுகரூபியுமாயிருந்துதிரு
வருள்வழங்குமகிமையோனே. (மகூ)

காந்திதருமகுடமத்தகடகமுதலுடையவராய்க்கருதுவோர்
க்கும், போந்நபயப்பிறதானமளிப்பவராயுயிர்கடுக்கம்போக்கு
வாரா, யேய்ந்தவுருவுள்ளவராயில்லாராய்மாதவனுக்கின்பராகி,
வாய்ந்தமனுகுலராமன்பூசிக்குஞ்சிவசயிலவாழ்வினரே. (உம)

சிற்பராராய்ப்பிரபஞ்சந்திரிப்பவராய்த்திரிகாலந்தன்னிலேயு
முற்பனமாயுள்ளவராயெக்காலுமுலகுதொழுமொருவராகிச்
சற்பசிரேட்டங்களையும்பூடணமாயுடையவராய்ச்சம்புவாகி
நிற்பவராய்ச்சந்திரசூரியர்வயங்குமவுலியராய்நிருத்தராயும். (உக)

ஆசைமுதலாகியதோடங்களில்லாதவராயுமனுதியாகிப்
பாசவினைகளைந்திடுபராபரமாய்க்கலிகாலப்பாவம்போக்கு
மீசருமாய்க்காலாகாலச்சொரூபராயடியாரீட்டும்பாவ
நாசமுறச்செய்பவராய்க்காலபரிபாகமிலாநாதராயும். (உஉ)

மேருவில்லராய்மறையோர்வேள்வியினுற்பூசிக்கும்விமலரா
கிப், பாரிலுள்ளோர்முனிவரிமையோர்வணங்கும்நளினமலர்ப்ப
தத்தராயும், நாரியிடம்பிரியாதசெயதேவமாதேவநம்பனான,
வாரியமுதேசகலதேவதைக்குமதிபதியாய்வந்தவாழ்வே. (உங)

காரணராய்நித்தியராய்விருப்புவெறுப்பிலராய்க்காமேசராகி
யாரணராயாரணத்தினுட்பொருளாயதிலொளியாயகிலம்யாவும்
பூரணமாய்நிறைந்தவராயாதாரமில்லவராய்ப்புனிதராகி
வாரணத்துவுரிபோர்த்துச்சிவசயிலபதியாகவந்தவாழ்வே. (உச)

ஆனந்தரூபருமாய்மாயைகளைக்கடந்தவராயமரர்யாருங்
கானங்கொண்டேற்றுகருணைக்கடலாயன்பர்மனக்கவலைமாற்றி
யீனந்தங்கியபிறப்போடிறப்பானகடலகற்றியிடுவராகி
வானந்தமாகிநடுவிறந்தபொருளேயெனவும்வணக்கஞ்செய்தார். (

(வேறு)

கமலாசனனைப்படைப்பாய்சரணங்கரியோனெனவேபுரப்
பாய்சரண, மமலாவதுசங்கரிப்பாய்சரணமறிவேயறிவின்றெளி

வேசரணம், விமலாசரணம்நிலநீர்கனல்கால்வெளியாகியவாசர ணஞ்சரண, மிமவான்மகளுயகனேசரணமெனையாளிறைவாசர ணஞ்சரணம். (உ௬)

மணியேயமணியிறொளியேசரணமலரேமலரின்மருவேசரண மணியேயமணியினமுதேசரணமமுதேயமுதின்றெளிவேசரணம், பணிவார்பிணிவேரறவிடுவாய்சரணம்பசுபாசமலங்களைவாய்சர ணந், தணியாவொளியானவனேசரணஞ்சயிலாதிபனேசரணஞ் சரணம். (உ௭)

(வேறு)

கலித்துறை.

ஒன்றுயிர்சுடரிரண்டுபூதங்களோரைந்தாய்
நின்றநாதனைவிளக்கிருக்கவுங்கனல்நேடிச்
சென்றவாருமாய்ப்பாற்கடல்மீனுமச்சிர
மன்றியோர்பொசிப்பினுக்கலைவதுவுமாயலைந்தேன். (உ௮)

அய்யனேபிறப்பிறப்பெனுங்கடலையானகலச்
செய்யவேண்டுவதுன்கடனுனதுசேவடிகள்
கைகளாற்றொழுதேற்றுவதென்கடன்கண்டா
யுய்யுமாறெனக்கருள்புரிந்திரங்கிடாயுரவோய் (உ௯)

என்றுபோற்றியத்திரிமுனியிருந்தனனிப்பாற்
குன்றவார்சிலைக்குழகனுமவர்க்கருள்கூர்ந்தே
நன்றதாம்வரமுதவினநவிலுவோமென்று
துன்றுமாதவச்சூதனுஞ்சொலத்துடங்கினனால். (௩௰)

அத்திரிமாமுனிசுயம்புலிங்கதரிசனச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தங்கள் உ௱௬௮.

நாலாவது

# அத்திரிமுனிக்கனுக்கிரகமானசருக்கம்.

கலித்துறை.

முடிவின்மாதவமுனிவிர்காளத்திரிமுனிவர்
படியின்மீதினிற்பலமுறைதுதிசெய்துபதும
வடிதொழுதிடுமவர்க்கருள்புரிகுவதாகப்
பொடியணிதிருமேனியனொருமொழிபுகலும். (௧)

உத்தமதவனத்திரிமுனிவனையொருங்கே
யத்தனுந்திருநோக்கருள்செய்துநல்லறமும்
பத்தியுமிலார்தமக்குநாம்வெளிப்படோமுனக்கு
நித்தியங்கலியாணமாய்மனதினின்றிடவே. (௨)

வேண்டுநல்வரங்கேளெனவிமலனும்விளம்ப
வாண்டநாதனையகிலமாயதிலுளவுயிராய்
நீண்டமாலயற்கரியதாயென்றுநித்தியமாய்ப்
பூண்டவன்பினர்க்கருள்செயும்புண்ணியப்பொருளே. (௩)

என்றுமியான்றெரிசித்திடவீண்டிந்தவடிவாய்
நின்றுயிர்க்கெலாம்புத்தியுமுத்தியுநிகழ
நன்றதாகியவாகுதிதானநற்செபமு
மொன்றுபற்பலகோடியதாகவுமுதவி. (௪)

கோதிலாத்திரிகூடமால்வரையின்றுமுதலா
யாதியாஞ்சிவசயிலமென்றகிலமும்வியந்தே
யோதிடும்படிசெய்தெனக்குனதுசேவடியிற்
பேதியாதபேரன்புநற்பத்தியும்பெற்றே. (௫)

மற்றொருவிடையங்களின்மனதுசெல்லாமற்
பெற்றிடும்படிக்கருள்செய்தேயெனைத்தினம்பிரியாச்
சுற்றமாகியசீடனுநாடொறுந்தொழுதே
யுற்றசேவைசெய்திடவருள்புரிந்திடாயுரவோய். (௬)

என்னமாமுனிவரனடியிணைபணிந்திசைக்க
முன்னவன்றிருவாய்மலர்ந்தொருமொழிவிளம்பு

மன்னுமாமறைமுனிவகேட்டநல்வரங்க
டன்னைநல்கினேம்ரகசிபமொன்றுசாற்றுவமால். (எ)

இத்தலமுதற்றுணமாயினிதமர்ந்துறைவே
மத்திரிமுனிவரநமக்கற்புதமான
வுத்தமதலமினமிரண்டுள்ளதென்றுவப்பாய்
சித்தனுந்திருவாய்மலர்ந்தருளுடனிகழ்த்தும். (அ)

ஈதலாற்றுவத்தலநமக்குளதகுதிசைப்பேஞ்
சீதநீர்க்கடலையின்கரைப்பச்சிமத்தினிலே
போதன்மாலமராதிபர்பொருந்தியதான
மேதநீக்கும்வாலீசுரந்தனிலுமியாமிருப்பேம். (கூ)

பொன்னகர்க்கிறையாகியமகபதிபுதல்வ
னன்னவன்கவியிந்திரன்வாலியென்பவன்றன்
பின்னவன்சுக்கிரீபன்வெய்யோன்மகன்பிலவான்
றன்னுடனமர்புரிந்தனனெடிதுநாள்சலித்தே. (ய)

வாலியென்பவனத்தலந்தன்னில்வந்தணைந்தே
சீலமார்புனற்கடலையிலாடியேதினமுங்
காலமூன்றெமைப்பூசனைபுரிந்துளக்கனிவாற்
சாலவுந்நெடுநாட்புரிந்தானருந்தவமே. (யக)

பொருந்துமன்பிறைற்பூசனைபுரிந்திடலானுந்
திருந்துமாதவம்நெடிதுநாட்செய்திடலானும்
பெருந்தவத்தவாயெதிர்த்தவர்பெலன்படுபாதி
யருந்தவம்புரிவாலிபெற்றிடவரமளித்தோம். (யஉ)

மேலைநாளெமைவாலியும்விரும்புபூசனையால்
வாலிநாதரென்றவண்சுயம்புலிங்கத்தில்வசிப்ப
தாலும்போகமுமுத்தியுமளிக்குமத்தலத்தின்
மூலமார்தெரிந்துரைக்கவல்லார்மறைமுனியே. (யங)

உத்தமத்தினுக்குத்தமமாகயாமுறையு
மத்தலத்தின்றென்புலத்தினிற்சுதிதலமாக
முத்தமிழ்வரைக்குத்தரகுணதிசைமுழங்கித்
தத்துதண்புனற்கடலையின்றென்கரைதனிலே. (யச)

தென்கயிலையாம்விதிகிரேதாயுகத்தினிலே
யன்புடனெமைப்பூசனைபுரிந்தனனன்றிப்
பின்புகந்தொறுமுகந்தொறுமெண்ணிலாப்பிரம
ரின்புறவும்பூசித்தனர்மகத்துவமெளிதோ. (௰௫)

தருமமோட்டத்தங்காமமுத்தியுந்தருகின்ற
பிரமதேயமதென்றுமூவுலகமும்பேசு
மருமைமாதவனுரோமசனுங்குபூசித்தே
பெருமையாநித்தியதத்துவநாந்தரப்பெற்றான். (௰௬)

தேவர்தானவர்சித்தர்வித்தியாதரர்திருமால்
பாவிரிஞ்சனேமுதலுளோர்கயிலைமால்வரையின்
மேவியாங்குளமலர்கொடுபோந்துநல்விதியாற்
பூவுலகிலத்தலத்தெமைப்பூசனைபுரிந்தார். (௰௭)

ஆகையாற்கயிலாயமென்றகிலமும்புகலப்
பூகவெலிசூழ்பிரமதேயத்திலெப்பொழுது
மாகவானவர்புவியுளோர்நிதம்வணங்கிடவே
யோகையாயுமையவளொடுமமர்ந்தினிதுறைவேம். (௰௮)

மருப்பதுமத்தில்வளரயன்கடனைவாருணையா
யிருப்பதாயதிற்றீர்த்தஞ்சிரார்த்தம்யாகமுமே
விருப்பினாற்செய்வோர்க்கொன்றுநூறாய்விளைந்திடவு
மருப்பிலன்னதியாடியேநமையனுதினமும். (௰௯)

சேவைசெய்திடுமவர்க்கேமக்கொட்டிதீவினைகள்
பாவநோய்மனப்பிணியேமுதற்பருவரற்கண்
மேவிடாதநல்வரங்களுமத்தலமேவு
மியாவருஞ்செல்வநல்லறம்பெற்றிருந்திடவும். (௨௰)

மிக்கதாம்வரம்வேண்டினன்சதுர்முகன்விரும்பி
யக்கணமவன்கேட்டநல்வரங்களுமளித்தோ
மிக்கடனையாங்கங்கையுஞ்சிறிதுறைவினிற்
புக்குமத்தலமகத்துவம்புகல்வதற்கெளிதோ. (௨௧)

இந்தமூன்றுதானமுநமக்கினிமையாகையினாற்
சிந்தைசெய்துவந்தனுதினஞ்சேவைசெய்திடுவோர்

பந்தவல்வினைநீங்கியேபரகதியடைவா
ரெந்தமக்குநீவிருப்பொடுமெனமிகவினையந்தே. (உஉ)

உரைத்ததோத்திரநமக்குவப்பாயிருப்பதனாற்
றரைக்குள்யாவரும்பத்தியினாற்சதகாலுந்
திருத்திநாம்பெறப்புகன்றுநஞ்சேவைசெய்திடுவோர்க்
கருத்தியோடுமென்னோரிடத்தனுதினமிருப்போம். (உங)

அருமையாகநாம்பிரசன்னமானகாலத்திற்
பெருமையாம்பொருளவர்கள்பெறுதனுமுளதோ
வுரிமையாய்த்தினமூன்றுகாலமுமுரைப்பவர்க்குத்
தருமமோடத்தகாமமுமுத்தியுந்தருவோம். (உச)

சத்தியமிதுயாவராயினுமிந்தத்தலத்தி
லுத்தமங்களாம்புண்ணியகாலத்திலுவப்பாய்
நித்தமாகியதீர்த்தஞ்சிரார்த்தமுநெகிழ்ந்த
பத்தியாகவும்பிண்டப்றதானமும்பண்ணி. (உரு)

தேவர்களுடன்முனிவரர்பிதிர்க்களுந்திருத்தி
யாவதாய்த்தருப்பணித்திடுமவரிருவழியின்
மேவியபிதிர்க்களும்பதமடைகுவர்மெய்யே
கூவின்மிக்கதாம்பஞ்சக்குரோசமத்தியிலே. (உசா)

செய்யுமோமங்கடானங்கள்செபங்களுநமது
மெய்யருளினலொன்றுகோடியினினுமிகுமா
லையமில்லைநஞ்சிவலிங்கந்தன்னிலியாவருக்கு
முய்யுநன்னெறிகாட்டியங்கினிதமர்ந்துறைவோம். (உஎ)

அன்றியுங்கலிகாலத்தில்ந்தரவடிவாய்
நின்றிடுவதாமாகையானீயுமன்னிலையை
யொன்றியேநமைத்தினந்திரிகாலமுமுவப்பாய்
நன்றதாகியபூசனைபுரியெனநவின்றான். (உஅ)

இப்படிச்சயிலேசருமத்திரிக்கியப்பி
யொப்பிலாத்தலத்தமர்ந்தினிதிருந்தனனுமையா
யெப்புவனமுமீன்றருள்பரமகலியாணி
யப்புவேணியர்பாங்கர்தெக்கணத்தினிலமர்ந்தாள். (உகூ)

நந்தியாதியாங்கணங்களுமாலுநான்முகனுந்
தந்திமாமுகனறுமுகன்சத்தமாதாக்க
ளுந்துவெள்விடைத்தேவர்தண்டீசர்விண்ணுலகா
ளிந்திரன்முதற்றேவர்கணடனவேந்திழையார். (௩௰)

பருதிமாமதிதிக்குளபாலர்கந்தருவர்
பிருகுவேதவியாசராம்பிரமமாமுனிவ
ரருமைநாரதன்முதலுளவமரர்மாமுனிவர்
மருவியங்கமர்ந்தவரவர்தானத்தில்வைகி. (௩௧)

இருப்பதாகவேசிவசயிலேசருமிருந்தார்
விருப்பமாகவேயத்திரிமுனிவிசுவசத்தா
லருப்புமன்பினல்விசுவகன்மாவையங்கழைத்தே
திருப்பணியிமையோர்திருமாணமாய்ச்செய்தான். (௩௨)

ஆலயம்பிரகாரம்விமானங்களனைத்து
நாலுவாயிலுமிமைத்துநற்றேவர்யாவருக்குஞ்
சாலவவ்வவர்தானங்கடனையுஞ்செய்தைந்து
காலமத்திரிமாமுனிகடனையிலாடி. (௨௩)

சயிலநாதனையிமையவர்தலைவனைத்தனியைக்
கயிலையாளனைப்பரமகல்யாணியாங்கருணை
மயிலைமேவியகுழகனைப்பூசித்துமகிழ்ந்தே
யுயர்வதாங்கிருத்தியமனோசித்தியுமுடைத்தாய். (௩௪)

இருந்தனரெனச்சூதமாமுனிவனங்கிருந்த
வருந்தவச்சவுனகர்முதலாதியோர்க்கறைந்தான்
றிருந்துமாதவர்செவிப்புலன்றெவிட்டிடப்புகன்ற
பொருந்துசூதனைநோக்கியேபுகலுவதானர். (௩௫)

நாலாவது அத்திரிமாமுனிக்கனுக்கிரகமானசருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ௩௱௩.

அஞ்சாவது

## பிரமதேவர்பூசித்தசருக்கம்.

கலித்துறை.

மன்னுமாமறைமுனிவரர்கேட்டுளமகிழ்ந்தோந்
தொன்னெறியுணர்சூதமாமுனிவதொல்லுலகிற்
றன்னிகர்சிவசயிலமுஞ்சிவதலங்களுக்குண்
முன்னமாகுமனாதியென்றருளொடுமொழிந்தாய், (க)

ஆர்பொருட்டிலனாதியதானதத்தலமும்
பாரிடத்திலெவ்வுலகத்திலுயிரெலாம்பரவ
யேர்தருஞ்சிவலிங்கரூபத்துடனிருந்தார்
போரரவபூடணனையார்கண்டுபூசித்தார். (உ)

அத்தலமகிமையிற்றிலமளவுஞ்சோர்வன்றிச்
சத்தியங்களாற்புகலெனமுனிவரர்சாற்ற
வுத்தமகுணமுடைச்சூதனுமனமுவந்தே
புத்தியாலுணர்ந்தருந்தவமுனிவர்க்குப்புகல்வான். (ஙூ)

வாருநன்னெறிமுனிவிர்காள்நீவிர்வையகத்தி
லேருலாவியமுனிவர்கள்சிரேட்டராயிருந்து
நீருலாஞ்சடைநிமலனுக்கன்பராய்நிதமுஞ்
சோர்விலாதடிக்கடிசிவகதைகளைச்சொல்ல. (ச)

உமதுபேரன்பாலதுபுதிதாகநீருவந்தே
யெனைவினவியேகேட்பதினாலுமக்கிசைப்பே
மமைவிலாதகற்பாதியிற்சற்குணரான
கமலநான்முகன்செகமெலாம்படைத்திடக்கருத, (ரு)

மதிமயங்கியேசிருட்டியின்றொழிலெலாமறந்தே
யதிகிலேசராயசத்தராயிருக்குமவ்வளவின்
முதியதாகவோரறிவவர்மனதினில்முன்னிப்
பதியதாஞ்சிவனேவலாலுலகெலாம்படைத்தோம். (சூ)

அச்சிவன்செயலிப்படிச்செய்குவதானு
லெச்செயல்பிறிதுள்ளதோசிவன்செயலின்றி
நிச்சயமிதுவெனவவர்மனதினிணைந்தே
மெச்சுமாமறைவேதனுந்துயருறும்வேலை. (எ)

மாகமீதசரீரிவாக்கானதுவழங்கும்
கோகனகமேவியமறையவர்மனங்குளிர
வாகநீர்வருந்துவதென்கொல்சிருட்டிநீரடைந்தே
யோகையாம்படிகேளுமென்றருளுடனுரைக்கும். (அ)

தெக்கணச்சமுத்திரக்கரையதனிற்றென்மலைய
மிக்கதாமதற்குத்தரமுலகெலாம்வியப்ப
முக்கணுயகராகநாம்வான்முகடுருவத்
தக்கதாஞ்சிவசயிலமென்றொருதடவரையே. (கூ)

அத்தடவரைக்குணதிசைவிரைவினீரடைந்து
சித்தமும்பொறிநெறியினிற்செலுத்திவிடாமன்
மெய்த்தவம்புரிகுதிரவண்மேதினியதனி
லுத்தமங்களாம்புண்ணியச்சேத்திரமுமக்கு. (௰)

ஆங்கிலிங்கசொரூபியாய்த்தோன்றிநாமகிலம்
பாங்குடன்சிருட்டித்திடும்வகையெலாம்பகர்வோம்
நீங்கியவ்வயின்செல்லெனநிகழ்ந்திடக்கேட்டே
யோங்குமாமறைக்கிழவனுமதிசயித்துவந்தே. (௰க)

அலமொழிந்தகமகிழ்ந்தமராதிபர்க்கெல்லாந்
தலைவனுகியநான்முகன்சடுதியிலெழுந்து
நிலவுலாவியசிவசயிலத்துநேர்குணக்காய்
மலையமால்வரைக்குத்தரம்விரைவில்வந்தடைந்தே. (௰உ)

பொறிகளொன்றதாய்மனநிலைகூடிடப்பொருந்தி
யறிவுமேற்கொளரேசககும்பகமடக்கி
நெறியினூற்சுழிமுனையைநேர்நிறுத்தியைந்தெழுத்து
முறுதியாய்த்தியானித்துளபுலன்களையொடுக்கி. (௰ங)

அரியவாகியதவசினைப்பிரமனுமவற்றுட்
புரியுநாளையிற்புகலருங்கருணையங்கடலாய்த்

தெரியவேசுயம்புலிங்கத்திற்றெரிசனைகொடுத்தான்
கரியமாயனுக்கடியிணைகாட்டிடாக்கடவுள். (௰௪)

அண்ணலேருன்றிடமலரயன்பரவசமாகி
யுண்ணிலாவியபெருங்களிப்பலையெடுத்துவட்டக்
கண்ணிலானந்தப்புனல்சொரிந்திடக்கரங்குவித்தே
மண்ணில்வீழ்ந்துதோத்திரங்கள்செய்தான்சதுர்வாயால். (௰௫)

(வேறு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உமையொருபாகாபோற்றியுலகெலாம்வியப்பதிற்கு
மமைவிலாவடிவாபோற்றியாத்துமரூபாபோற்றி
யிமையவர்தலைவாபோற்றியிறைவனேபோற்றிசைவ
சமையநாயகனேபோற்றிசங்கராபோற்றிபோற்றி. (௰௬)

குணங்களான்மறைக்கப்பட்டமகிமைசேர்குழகாபோற்றி
யணங்கரவசைத்தோய்மாயையன்றியவுருவாபோற்றி
யிணங்கியவுலகுக்கெல்லாமேலதாமிறைவாபோற்றி
மணங்கமழ்கடுக்கைதிங்கள்வனைந்தசெஞ்சடையாய்போற்றி

அணுவினுக்கணுவாபோற்றியதிகத்துக்கதிகாபோற்றி
புணர்விஞஞ்சிவமென்றுன்னுந்தியானத்தையுடையபேர்க்குத்
தணவிலாதிருக்குமந்தவனுபூதிதருவாய்போற்றி
திணையுளோர்க்கருளுமுக்கட்சிவசயிலேசாபோற்றி. (௰௮)

என்றுபல்துதிகள்செய்தேயிணையடிதொழுதுபோற்றி
நின்றநான்முகனைநோக்கிக்கருணைபானிரப்பிச்செம்பொற்
குன்றவார்சிலையெங்கோமான்கோதறுசிருட்டியாவு
மொன்றியவருளினாலேயவர்க்குபதேசஞ்செய்தார். (௰௯)

அரியநல்வரமும்பெற்றேயரனனுக்கிரகத்தாலே
புரியவாஞ்சிருட்டிதன்னாலுலகெலாம்படைத்தேயின்ப
மரியபேருவகையெய்திமனமகிழ்ந்தினிதுவைகிப்
புரிசடைமுடித்தஞானப்புனிதர்க்குமுமைக்கும்பாங்காய். (௨௰)

நீடுமாலயமுண்டாக்கிநிமலனைமறைகளாலுந்
தேடரும்பொருளைமுக்கட்சிவசயிலேசன்றன்னைச்
சோடசவுபசாரத்தாற்றொழுதுபூசனைகள்செய்தே
யேடலர்வாசங்காட்டியெழுந்திடும்வசந்தகாலம். (௨௧)

கூடுபங்குனிப்பின்றுளிற்கொடியிடையுயர்த்திவிண்ணோர்
நாடருமுனிவர்மற்றநாட்டுளோரெவரும்போற்றத்
தேடரும்பொருளாமுக்கட்சிவசயிலேசற்கன்பாய்
மேடசங்கிராந்தித்தீர்த்தவிழாவினைநடத்தினானே. (உஉ)

உச்சவமந்தத்தீர்த்தமுவந்துநான்முகனுமாடி
யச்சிவசயிலநாதனடியிணைபூசித்தேத்தி
நிச்சயப்பொருளேமுக்கணிமலனேநிகரிலாத
விச்சையாம்வடிவாநாயேன்விண்ணப்பமுளதாமென்று. (உஙு)

தரையிடைபணிந்துபோற்றிச்சருவசங்காரவாதி
வரையிலெலன்பொருட்டாலிந்தவரைதனிலிங்கரூபா
யுரையுணர்விறந்தமுக்கணொருவனேதோன்றினாயென்
றெரிவுறவுபதேசித்துச்சிருட்டிநான்பெற்றதாலும். (உச)

தவமிவணியற்றலாலுந்தடவரைதனையனாதி
சிவசயிலமுமிதென்றேசிறந்தபேருடைத்தாயிந்தக்
குவலயந்தன்னில்யாருங்கூறிடவரமும்பெற்றே
யவனமர்சத்தியலோகமடைந்தனனதனையாலும். (உரு)

அவ்வரையடியிலீசனமர்ந்தினிதிருப்பதாலுந்
திவ்வியவரையனாதிசிவசயிலமுமதென்றே
யெவ்வுலகத்துளோருமெடுத்தியம்பிடுவர்மெய்மைத்
தெய்வமாதவரோயின்னஞ்செப்புவோங்கேண்மினென்றே. (

(வேறு)

கலித்துறை.

கோதிலரும்பொருளனைத்துங்குறைவின்றியிருக்குமந்தத்திரிகூடத்தி, னாதியிலேயண்ணலெழுந்தருளியதாலாதிசிவசயிலமென்று, மோதிடுமிவ்வுலகனைத்துமெனச்சூதனுரைத்துமனதுவப்பாலிந்தக், காதையைநீர்வினவியதான்முனிவரரேபுகன்றதெனக்கழறலுற்றான். (உஎ)

5-வது பிரமதேவர்பூசித்தசருக்கம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ாருா.

# ஆறுவது
# பச்சிமமுகமானசருக்கம்.

---

கலித்துறை.

என்றுமுனிவரர்மகிழச்சூதனிசைத்திடவுமன்னோரினிமையாக, மின்றிகழுஞ்சடைமுடியோய்மேதினியிலுள்ளசிவாலயங்கடன்னி, லொன்றுசிவக்குறிகள்முகங்குணதிசையாயிருப்பதுவுமுளதாமீதை, யன்றியுமச்சிவசயிலமனுதியதிற்சுயம்புலிங்கமாயுந்தானே. (௧)

ஏதுகாரணங்களினாற்குடக்குமுகமாயிருப்பதிமையவெற்பு, மாதகிலந்தனையீன்றவுமையவளுக்கேதுபுரிமகத்துவத்தாலோதிடவிவ்வுலகமெலாங்கலியாணியெனுநாமமுடையளானாள் வேதவியாசன்கருணைமிகுதியினாற்சிவபத்திமிகுந்தமேலோய். (௨)

சகலகலைக்கிருப்பிடமாய்த்தலக்கடலாய்மூன்றுலகின்றன்மையாவும், புகலவருமொருமுதலாய்ப்புண்ணியமாய்மலவிருளைப்போக்குஞானப், பகலவனுமெங்கண்மனப்பசிக்கமுதைச்செவிக்கூட்டும்படிக்கென்றேயிவ், வகலிடத்திலவதரித்தசூதவிந்தக்காதையெங்கட்கறையவேண்டும். (௩)

என்னமுனிவரர்வேண்டிக்கேட்டகதையெடுத்தியம்பவிமவானீன்ற, வன்னையுமைபரமகலியாணிமணவாளர்தமையகத்திலன்பா, யுன்னியவரருள்போற்றிச்சிறிதுபொழுதிருந்திதனையுரைப்பேமென்றே, பன்னுமறையளவறிந்தவருந்தவச்சூதனுமெடுத்துப்பகர்வதானான். (௪)

கருதரியதவமுனிவீர்சிவசயிலப்பதியிலொருகாலந்தன்னில், வரியுழுவையதழ்புனைந்தபரமசிவனட்டகுணவரையாயென்றும், பரிவுடையபார்ப்பதிசமேதருமாயிருப்பளவிற்பதுமச்செய்யா,ளரிமுதற்றேவர்கண்மகவானமரர்திசைப்பாலர்கதிரவர்கள்சோமன்.

அட்டவசுதேவதைகள்பதினொருவருருத்திரர்சித்தாதியோர்கள், மட்டளவிலாதவிசைக்கின்னரர்கந்தருவருடன்வசிட்டராதி, யிட்டமுளபிரமமுனிவரரெவரும்நாரதரோடெண்ணிலாத, சிட்டரெனுந்தேவமுனிவரரெவருங்கங்கைமுதற்றீர்த்தமியாவும்.

மிக்கபிரணவத்தோடும்வேதங்களஞ்செழுத்தின்மேவியிற்குந், தக்கசத்தகோடிமகாமந்திரங்களத்திரியாகதவத்தின்மிக்கோ, ரொக்குமறைபவர்முதலாயுள்ளோர்களெல்லோருமொருங்கேகூடி, யக்கணிமேனியன்றனையேதெரிசனைசெய்துள்ளமகிழ்வடைந்துபோற்றி. (௭)

அகிலபுவனேசுரனுஞ்சிவசயிலபதியைமனதன்பினோடும் வெகுவிதமாய்த்தோத்திரங்கள்செய்துபயபாரிசமுமேவினின்றே சகளவடிவாயுமையோடிருந்தலர்ந்தகமலமுகன்றனைநோக்கி மகிழ்வுபெரிதாயிருந்தாரவ்வேளைபிருங்கிருடிவந்துதோன்றி. (௮)

கருத்துநனிவிருப்பினராய்ப்பரமசிவன்றிருமுன்புகளிப்பினோடும், நிருத்தமளித்தனர்சயிலபதிகருணையிரப்பியிடநெடிதுபோதங், கருத்தியுடன்பலதுதிசெய்திறைவர்திருவருளாலம்பிகையைநீங்கித், தரித்தபுனற்சடைமுடியார்தன்னைவலஞ்சூழ்ந்தடியிற்றாழ்ந்துநின்றார். (௯)

மருங்கிருந்தவுமையவளுந்திருமனதுவெதும்பியிறைவதனம்நோக்கிப், பிருங்கிருடியெனைநீங்கியும்மைவலம்வந்ததென்னோபேசிரென்றே, கருங்குவளைவிழிசிவப்பவிதழ்துடிப்பக்கேட்டளவிற்கருணைகூர்ந்தே, யரும்பியபுன்னகைபுரிந்துசயிலபதிமலைமகளுக்கருளிச்செய்வார். (௰)

அண்ணலுமைதனைநோக்கியுன்னையுநம்மையுமுணர்வாலறிந்தேபூசை, பண்ணினபேர்க்குன்னிடமாய்ப்பலன்பெறுவதில்லையெனப்பகர்தலோடு, மெண்ணரியசகலபுவனமுமுருவாய்நிறைந்ததவளென்பதாலே, திண்ணமுடன்பிருங்கிருடியுடற்குருதிதசைமுதலாந்தேவிகூறாய். (௰)

உள்ளதெலாமுமைவாங்கப்பிருங்கிருடிபசத்தனொடுங்கிநின்றான், பிள்ளைமதிதவழ்குழலிபச்சிமத்திற்சிவனைவிட்டுப்பிரிந்துபோனாள், தெள்ளமுதேநற்புணங்களுடையவளேயெனக்குடக்கேதிரும்பிநோக்கி, வள்ளறிருவாய்மலர்ந்துகலியாணியிங்கேநீவருவாயென்றார். (௰௨)

உன்னிடத்திற்பரியாசமுநரத்ததெனவுண்மையினையுணர்கிலாயே, யென்னவுநன்மொழிகள்பலவெடுத்திசைத்துங்கேளாம

லெழுந்தேயெய்தி, யன்னையுமையவள்பிரிந்தத்திரிமுனியாச்சிரமருடக்கதனிற்றேவ, கன்னியர்கள்புடைசூழநற்றவஞ்செய்தாளிமையக்கன்னிதானே. (யஙு)

அத்தவத்தினிலிறைவர்திருமேனியதிற்பாகமடையவேண்டிச், சித்தமுடன்புலன்பொறிகளொன்றாகிச்சிவனடியேசிந்தித்தேத்தி, மொய்த்தசடைவிரித்துமரவுரியுடுத்துப்பொடிதரித்துமுகஞ்சேரக்கும், பத்தியுடனணிந்துமலர்ப்பாதநிமாலம்பமுமாய்ப்பரிவினோடும். (யச)

ஒருகரத்திற்சிவமணிதொட்டொருகரத்திலுருவையெண்ணியுவப்பதாய்மற், றிருகரமுந்திருமுடிமேலஞ்சலிசெய்தரியதவமியற்றுகின்ற, ளரியதவக்கவுதமரோடத்திரிமாமுனிமுதலோரடைந்தேஞானப், புரிகுழலாடன்னையன்னோர்விருப்பினோடும்பூசனைகள்புரிவதானார். (யரு)

இத்தகையவாய்நெடுநாளரியதவம்புரிந்திருந்தாளிறைவராங்கே, சித்தவிகாரத்தினொடும்பிரிந்திருக்குமுமையவளைச்சிந்தைசெய்தே, வித்தகமாங்கங்கைமுதற்பெண்களைவிட்டழைத்துவரவேணுமென்றே, யத்தரவர்முகனோக்கிநன்மொழிகள்மிகுதிபலவருளிச்செய்தார். (யசா)

கங்கையருண்மொழிகேட்டுக்கண்ணுதலேவலின்மிகவுங்கடிதுசென்றே, பொங்குநதிரூபமதாயண்ணறிருவுளம்விருப்பப்பொருட்டினாலே, யங்கடைந்தேயுமையவளுக்குணர்த்திடுநன்மொழிகள்பலவறைந்தேநின்பாற், றங்குதிருவுளத்தினராய்மேற்குமுகமாகநின்றார்சயிலநாதர். (யஎ)

என்றுகங்கையுமையவளுக்கினியமொழிவேணதெலாமிசைத்துநின்று, ளன்றுமுதற்சிவசயிலமேன்முகமாயிருப்பதுகல்யாணியென்றுங், குன்றவில்லியாரழைத்தபடியாற்கல்யாணியென்றுங்கூறுமவ்வைய, மின்றவம்பார்ப்பதிபுரிந்தகாரணத்தாற்சிசயிலமென்பதாகும். (யஅ)

மேன்முகமாயிருப்பதுவுங்கலியாணியென்பதுமெவ்விதத்தாலென்றென், பால்வினவினீரதனைப்பகர்ந்தோமின்னமுங்கே

ட்கப்படுவதுண்டேற், சாலவுநாமொழிந்திடுவோமெனவுமருந்தவமுனிவர்தமக்குமென்று, காலநிலைதனையுணர்ந்தசூதமுனியருளினெடுங்கழறலுற்றார். (௰௬)

6-வது பச்சிமமுகமானசருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ௩௱௪௧.

ஏழாவது

# தேவிஇடப்பாகம்பெற்றசருக்கம்.

---

கலித்துறை.

மன்னுமருந்தவமுனிவர்சூதமுனிமொழிகருணைவதனநோக்கி, யன்னையுமைபரமசிவியாணிதவத்தாலிறையையடைந்தவாறும், பின்னுமவர்திருமேனிதன்னிலொருபாகமவள்பெற்றவாறும், பன்னுமறைமுனித்தலைவபுகலெனவக்கதையவர்க்குப்பகர்வதானர்.

அம்முனிவர்மனதுமகிழ்ந்ததிசயிப்பவகிலகாரணமாய்நின்ற, வெம்மிறைவர்தேவியைவிட்டிருப்பதரிதென்றுதிருவுளத்திலுன்னி,மும்மையுலகீன்றவளையழைத்துவரக்கங்கைதனைமுன்னேவிட்டுஞ், சம்மதியில்லாதவளோவென்றுதிருவுளநினைந்துசயிலநாதர்.

அத்திரிமாமுனிமனதிற்பிரியாதகாதலனசூயையென்னும், பத்தினியைத்தருமசிந்தையுடையாளைப்பதிவிரதப்பண்பினளைச், சத்தியவாக்கினளையெழிற்றையலைமாதவக்கொழுந்தைச்சகரவேலைப்,புத்தமுதமனையாளையண்ணறிருமுன்பழைத்துப்புகல்வதானர்.

(வேறு)

கலிவிருத்தம்.

இமவான்மகளாகியவேந்திழையா
ளுமையானவணம்முடனாடலுமா
யமையாமனவேகமுமாகியுமே
நமையேபிரிவாகினனன்னுதலே. (௪)

அரியாளுலகானதுயாவையும்பெற்
றரியாணமையுமுடையாளுலகிற்
பெரியாணிதமும்பிரியாதவள்சொற்
பரியாசமதுந்தெரியாள்பகர்வோம். (௫)

அகல்வானவர்மாலயன்மாமுனிவோர்
மிகவாகியபேரவைநாமெதுவாய்ப்

பகர்வாய்மைகளும்பதியாதுகுட
முகமாயவள்போயினதுமுறையோ. (சு)

கலியாணியெனுங்கனிவாகியபேர்
சொலிவாவெனலுந்துரிசாய்மனசஞ்
சலியாயரிதாந்தவசாலவண்மெய்
மெலிவாகியுமேவிடுவாளுமையே. (எ)

முதிர்காதலினன்முனமேவருணை
நதியானவளைநனியேவினதுஞ்
சதியாமவள்சக்களவாய்மைகள்சம்
மதியாகவுமேவரலாகுவளோ. (அ)

அனசூயையெனுமமுதேநமனு
மனமாயையினன்மெலியாவகையுற்
பனவாய்மைகணீபகர்வாயவளுக்
கெனவேண்டுவதுமருள்வோமினிதாய். (கூ)

பகையாகியமன்மதபாணதுயர்
மிகவாகியதான்மெலிவாயினதுஞ்
சகமாயைகள்செய்தொழிறுனிலதும்
புகல்வாயெனலுமவள்போயினளே. (ய)

கயிலாசபதிகனிவாய்மையினன்.
மயிலாமனசூயையுநன்மகிழ்வாய்
வெயிலாதபன்மேவியநீள்குடுமிச்
சயிலாதியுமேவினள்தானுறையும். (யக)

இடமாகியவாச்சிரமம்மதனேர்
குடபாரிசமெய்குழைவாயிமவான்
மடமாமயினின்றிடுமாதவசி
னுடமேன்மையுமொண்ணுதல்கண்டனளே. (யஉ)

கண்டேமிகவுங்கருணாலயளாய்
வண்டார்குழல்மாமயிலாமுமையாள்
தண்டாமரையாகியதாளிணையில்
மண்டார்வமுழங்கவணங்கினளே. (யங)

இமவான் மகளேபெண்யாள்பவளே
யுமையானவளேயுலகீன்றவளே
யமையாவடிவானவளேயிறைவர்
தமைமேவினளேசரணஞ்சரணம். (௰௪)

அயிலாதிபனுக்கணையேகடலிற்
றுயிலானவருக்கிளையாய்துகடீர்
கயிலாசமெனக்கருதிப்பதிசேர்
*சயிலாதிபனேசரணஞ்சரணம். (௰௫)

என்றேதுதிசெய்துபணிந்தெதிரே
நின்றேபனசூழ்புகழ்த்திடுவாள்
பின்றாழ்குழலாய்பிறைசேர்சடில
னின்றார்குடதிசையினிநேர்முகமாய். (௰௬)

கணைவேள்தொழில்காட்டவிருந்துமல
ரணைமேவிலரந்தியும்நண்பகலுங்
குணவாரிதியாகியகொற்றவருன்
மணவாளனைநீயுமறந்தனையோ. (௰௭)

அருவாயுருவாயதுவில்லதுவாய்ப்
பெருமாயைகளும்பிறவும்பலவா
மொருமாமுதலுன்னொளியில்லையெனி
லிருமாநிலமேலெளியாயினரே. (௰௮)

ஒருமாமுதலோருரவோருடைய
திருமாமனதுன்றிருமேனியிலே
யருமாமுதல்கலியாணியெனும்பெயர்
பெருமான்மொழியிற்பெருநெட்டுருவே. (௰௯)

அம்மாபிரிவாகியநாண்முதலா
வெம்மான்றொழிலேதுமிலாதவரா
யும்மான்மனதொன்றுமுணர்ந்திலருந்
தம்மாணைபுகன்றதுசத்தியமே. (உ௰)

என்றேபலவாகவியம்பிமன
தொன்றாயிறையோனிடமுற்றடையச்

*சயிலாதிப + அனே.

சென்றேவருவீர்திருமுன்பெனவு
நன்றுமொழியொன் றுநவின் றனளால். (௨௧)

ஆராவமுதேயனசூயையெனும்
பேரானவளேபெருமானருளாற்
சீரார்திருமேனியிலோர்பாகந்
தாராரெனிலென் றவசேபெரிதே. (௨௨)

சரதப்மிகுதென் றணையேகருணை
வரதன்றிருமேனியிலோர்வடிவந்
தரவின்மொழிதந்தருளுந்தனிலும்
விரதம்புரிவேன்மிகினும்படியே. (௨௩)

இறைவன்றிருமேனியிலோர்பாகம்
பெறுமன்புடையேன்பிறிதொன் றுமிலே
னறன்மென்குழலாயனசூயையெனக்
குறுமன்பினளேயுரைபொன் றுளதால். (௨௪)

உன்னையகனத்திரிமாமுனியோ
டென்னவலைநீயிசைவாகவுமே
சொன்னவர்சொற்படியாந்தவசே
மின்னாரமுதேவிளைவாகுவனே. (௨௫)

எனவேபுகலும்மளவிலெழிலார்
தனிமாதவர்கவுதமராதியர்க
ணனிசூழ்வரவேநன்மாதவனா
மனசூயைமணாளனடைந்தனனே. (௨௬)

அருமாதவரத்திரிமாமுனிவோர்
மருமாமலர்பல்வகையாலுமையா
ளிருபாதமலர்தனிலேயினிதாய்த்
திரமாகியபூசைகள்செய்தனரே. (௨௭)

மண்மீதுபடிந்துவணங்கியிரு
கண்ணாலிகலுழ்ந்துமிகுந்ததுதி
பண்ணாரமொழிந்துபணிந்திமவான்
பெண்ணாரமுதின்னருள்பெற்றனரே. (௨௮)

அக்காலனகூுமையுமாதரவான்
மிக்காமுனையாண்மனவேட்கையெலாந்
தக்காரொடுசொற்றினளத்திரியா
முக்காலமுணர்ந்திடுமாமுனிவர். (உகூ)

இன்பாமொழிகேட்டிதயந்தனிலே
தன்போதமுணர்ந்துவிசாரணையா
யன்போடொர்முகூர்த்தமிருந்தறைவார்
மின்போலொளிர்செஞ்சடைமெய்த்தவரே. (௩0)

(வேறு) கலித்துறை.

பாதாரவிந்தமவர்பணிந்தெழுந்துபார்ப்பதியேபரையேயம்மா, வாதாரமாயிறைவர்திருமேனிதனிற்பாகமடையநல்கும், கேதாரவிரதமல்லால்வேறுமொருதவப்பேற்றுற் கிடைப்பதில்லைப், போதாருஞ்சடைமவுலிப்புண்ணியர்க்குவிருப்பமதைப்போற்றுவாயே. (௩க)

மெய்த்தவரத்திரியிருதேவிளம்பமனமகிழ்ந்துதனவெற்பைத்தாங்கி, யெய்த்தவிடையுமையவணன்றென்றுமுனிவனைநோக்கிமவானிருஞ், சித்தமகிழ்காதலனைமேனையனகூுமையெனச்செப்பியந்த, வத்திரியைமனைவியுடனன்னைபிதாமுறைமையளாயருளிச்செய்தே. (௩உ)

இந்தவிரதந்தனையானனுட்டிக்கும்படிதெரிந்தேயெடுத்துச்சொல்வீ, ரந்தவகைப்படியானுமனுட்டிப்பேனென்றுமையாளருளலோடும், புந்தியினுன்முனியுணர்ந்தேபுரட்டாதிமாத்தையினிற்பொருந்துநாளா. யந்தமில்சுக்கிலபக்கத்தட்டமிதொட்டிருபத்தொன்றுனநாளும். (௩௩)

அதிகபத்தியுடன்கூடக்கேதாரநாதரைமெய்யன்பினோடும், விதிமுறை பூசனைபுரிந்தே யிருபத்தோரிழைத்துவரங்கரத்தில் வீக்கி, மதிநுதலேபரமகலியாணியம்மாயிந்தவரன்முறையாற்செய்தாற், கொதிமழுவாட்கையர்திருமேனியினிற்படுபாதிகொடுப்பாரென்றே. (௩௪)

என்றுமுனிவரர்புகலப்பரமகலியாணிமனதினிமையாக, வொன்றுகருத்தினளாகிக்கேதாரவீசுரனுக்குவப்பதாக, மன்றன்மல

ராற்பூசைபுரிந்தனன்கண்ணுதல்கருணைவடிவாய்வெள்ளிக், குன்றனையவிடையில்வந்துதேவர்கணம்புடைசூழக்குறுகினின்றார். ௩௫

கோடிமதிப்பிரகாசங்குலவுதிருமேனியராய்க்கொன்றைவேணி, சூடியசந்திரகாந்திதுலங்கவொருகுழையில்வளைதுவளமற்ற, நீடியகாதினிற்றோடுநின்றிலகநீலகண்டநிலவக்கையிற், கூடியமான்மழுத்திகழவபயவரதமுமிருகைகொடுத்துக்காட்ட. (௩௬)

பூசியவெண்பொடியொளிரவக்கரவப்பணிதிகழப்பொருவில்லாத, தேசுதருமுச்சுடராந்திருநயனத்திருக்கணருள்திகழக்காட்டிக், காசில்வரியுழுவையதளுடுத்ததின்மேற்பொங்கரவக்கச்சுவிக்கி, வாசமலர்த்திருப்பதத்தில்வனைந்திடுவீரக்கழல்கள்வயங்கித்தோன்ற. (௩௭)

கெந்தருவர்சித்தர்குண்டோதரன்வசுக்கள்கின்னரர்கிம்புருடர்விண்ணோர், நந்திமுதற்கணங்களுருத்திரர்கதிர்களாதமரேமுதலாயுள்ள, வந்தமின்மாதவர்தேவமுனிவரர்கள்புடைசூழவணந்தேயாங்கு, பெந்தைசிவசயிலபதிகலியாணிதெரிசனைசெய்திடமுன்னின்றே. (௩௮)

மூன்றுலகுமீன்றவளாளகலியாணியென்றவடன்முகத்தைநோக்கித், தோன்றியபேருவகையினாலவள்மனதுமகிழ்ந்துகளிதுளங்கவன்பாய், மான்றிகழுங்கரத்திறைவர்செய்யதிருவாய்மலர்ந்துவருந்திநீசெய், யூன்றியநற்றவத்தாலுங்கேதாரவிரதநமக்குவப்பதாலும். (௩௯)

நீமனதுமகிழ்வதுவாய்ச்செய்ததவநியமத்தானினைத்தயாவும், யாமளிப்போஞ்சூரியனுங்கிரணமும்போலெமதுளத்திலிருப்பாயென்று, வாமமளித்தனர்பெற்றேசயிலபதிகமலமலர்வதனம்நோக்கிக், காமர்பெறவினிதிருந்தாள்கண்ணுதலும்வலதுதிருக்கண்டக்கணோக்கி. (௪0)

உமையவடன்முகம்பார்த்தார்வியந்தொருவர்க்கொருவர்மனதுவப்பதாக, வமைவில்பெருங்கருணையினாலடிக்கடிபார்த்தினிதிருப்பதானார்வேத, னிமையவர்கண்முனிவர்மலர்மாரிசிந்திப்பே

பின்பமெய்தியன்னோர், தமைமறந்துதெரிசனைசெய்தகபகிழ்ந் தார்மனைவியொடுஞ்சயிலநாதர். (சக)

சத்தியுடன்விடையில்வந்துசிவசயிலந்தனிற்போந்துசகலமா ன, நித்தியராய்ப்பஞ்சகிருத்தியம்புரிந்தங்கினிதிருந்தார்நெடுநா ட்டேவி, பத்திமையிற்செய்தவத்தாலண்ணறிருமேனியிலோர்பா கம்பெற்றாள், வித்தகமாமுனிவரரேசிவசயிலநாதர்திருவிளையா ட்டாமால். (சஉ)

இனியவருந்தவமுனிவர்க்கிக்கதையையெடுத்தியம்பியின்ன நீங்கள், வினவியதெல்லாம்புகல்வோமென்றவர்கள்மனதுவிரு ப்புறவேஞானக், கனைகடலாய்ப்புண்ணியகாரணனாயெண்ணெண் கலையுங்கற்றீரொன்பா, னெனவருபுராணமுலகினில்விளங்கப்பு கல்சூதனிசைப்பதானார். (சஙு)

7-வது தேவிஇடப்பாகம்பெற்றசருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ஙகஉ.

எட்டாவது
## சுதெரிசனபாண்டியன்வேழ்விச் சருக்கம்.

கலிவிருத்தம்.

போதமாமுனிவரர்பொருவின்மாதவச்
சூதமாமுனிவனைநோக்கித்தொன்மையோய்
மேதகுசிவசயிலத்தின்மேம்படு
காதைகேட்டிடவினங்கருத்ததாயினோம். (க)

பண்டுநான்முகனுமப்பதியிலண்ணலைக்
கண்டுபூசித்திடுங்கதையுங்கூறினு
யண்டர்நாயகனையத்திரியும்பூசித்துக்
கொண்டிருப்பதுவும்நீர்கூறக்கேட்டனம். (உ)

நானிலந்தனிற்சிவசயிலநாதனை
மானிடர்பூசித்தவாறுமுண்டெனில்
ஞானமாமுனிவநீர்நவில்கவத்தல்
மேன்மையாங்கேட்டினம்வியப்பதாகவே. (ங)

அப்பதிமேன்மையாமறிவதாகநீர்
செப்பியுமனதினந்திருத்தியில்லையால்
முப்பொழுதுணர்ந்திடுமுனிவயாஞ்செயு
மொப்பருந்தவமுமுற்றுடையதாயினோம். (ச)

என்னமாமுனிவரரெடுத்துக்காட்டியே
சொன்னதையுணர்ந்துமெய்ச்சூதன்மானில
மன்னவர்பூசித்தமகிமையாகிய
தின்னமோர்கதையுளதென்னக்கூறினன். (ரு)

(வேறு)

கலித்துறை.

கண்ணகன்றஞாலத்தினிற்கவின்சிறந்ததுவாம்
பண்ணிசைந்தசெந்தமிழ்விரிபாண்டிதேயத்தில்

விண்ணிழிந்திருந்ததுவெனமேன்மையுமுடைத்தாய்
மண்ணிலந்தனிற்சிறந்ததுவாகியமணலூர். (௬)

அன்னகர்க்கிறையாஞ்சுதெரிசனனுமென்னு
மன்னவர்க்குமன்னவன்விதுகுலத்தினில்வந்த
தென்னன்மூன்றுலகத்திலுமவன்பெயர்செல்ல
விண்ணிலத்தினுக்கிந்திரனென்னவுமிருந்தான். (௭)

அந்தமன்னவன்சகலசாத்திரங்களுமறிந்து
பெந்தநீங்கியேபிராமணபத்தியுள்ளவனாய்ச்
சந்தத்ஞ்சொலியுறுதியுள்ளவனுமாய்த்தகைவி
லிந்திரியநிக்கிரகங்கள்செய்திருப்பனுமாய். (௮)

மன்னுயிர்களைத்தன்னுயிரெனவளர்ப்பவனா
யின்னிலத்தினிலொருதுரோகங்களில்லவனாய்
நன்னயமொழியாலுயிர்களைநயப்பவனாய்
மன்னுமாதவரிடத்தினிற்பத்திவாய்ப்பவனாய். (௯)

வெகுளியென்பதினுருவறிந்திலனுமாயறிவின்
பகுதியேயுருவாகியபண்புமாயுலகிற்
றகுதியான்வர்க்கரசனுமாகியேதரும
மிகுதியார்க்கிருதுக்களில்விருப்பமுள்ளவனாய். (௰)

கரங்கணீண்டதாய்க்கட்கடைசிவந்திருப்பவனா
யிரங்குநெஞ்சனாயிமையவர்க்கினியவனாகித்
தரங்கவேலைசூழுலகெலாந்தனிப்புரப்பவனாய்த்
திரங்களாஞ்சிவபத்தியேமிகச்சிறப்பவனாய். (௰௧)

உறுதியாஞ்சிவதீட்சையென்றதுவுமுள்ளவனாய்
மறுவில்சிந்தையிற்றுபரமுதலுளவகைக
ளிறுதியில்லதாஞ்சிவமெனக்கண்டிருப்பவனாய்
நெறியினாலரசுரிமைசெய்திருந்தனன்நெடுநாள். (௰௨)

நாலதாம்பலதானையின்கடல்நனிசிறந்தே
தாலமீதுளமன்னவர்திறைகளுந்தரவே
ஞாலமின்புறவரசுசெய்திருந்திடுநாளில்
மேலதாகவோரறிவுமேற்கொண்டனன்வேந்தன். (௰௩)

திசைவிளங்கிடப்புதல்வனில்லாமையாற்றெளிந்தே
யசுவமேதயாகத்தினைச்செயுங்கருத்தாகி
யிசையுநற்குருசமதக்னிமுனிவரனிடத்தில்
வசையின்மன்னனும்வந்தடிவணங்கிவாய்மையினால். (௰௪)

அய்யமைந்தனில்லாமையாலசுவமேதத்தாற்
செய்யும்வேள்வியிற்கருத்ததாயினன்நனிசிறக்கப்
பொய்யில்கேள்வியோய்மந்திரவிதியினாற்போற்றி
யுய்யும்நன்னெறியெனக்கருள்புரிந்திடாயுரவோய். (௰௫)

என்றுமன்னவனிசைத்திடமுனிவரனியம்பும்
நன்றுநீர்நினைத்ததுவுமிந்நானிலந்தன்னிற்
குன்றவார்சிலைநாதனுக்குவப்பதாங்கூறின்
வென்றிமன்னவசெயப்படுமனேகவிக்கினங்கள். (௰௬)

தேவரால்வருங்கலியுகமாகையாற்சிறப்பின்
பாவபெந்தங்கள்வெகுவிதமாகவுற்பவிப்ப
தாவதாகியகாலமாம்பீடைகளனுகுந்
தாவில்மன்னவவசுவயாகந்தனைநிறுவில். (௰௭)

மற்றும்வேறுளவேள்விகள்புரிவதுவழக்கா
முற்றவாய்மையிதாமெனமுனிவரனுரைத்தான்
கொற்றவனதுணர்ந்தருந்தவனுடன்கூறும்
பெற்றமூர்ந்திடுசிவன்றனக்குவப்பதாம்பெரியோய். (௰௮)

பேசும்வேள்விகளனைத்தினுமிதுபிருதிவியி
லிராசவேள்வியதாகையாலிருநிலமதனி
னீசனார்திருவருளினாலெழின்மறைக்குலத்தோ
ருசியாலுமேமுடித்திடுமன்னவர்க்கழகாம். (௰௯)

என்றுவேந்தனுமியம்பியேமனதிலின்பிலனாய்
நின்றகாலையில்வானிடையொருமொழிநிகழும்
வென்றிவேலவவசுவமேதப்பெருவேள்வி
யொன்றுசிந்தையாற்புரிந்திடுகெனவுரைத்திடலால். (௨௰)

அந்தநன்மொழிசெவிப்புலத்தரசனுங்கேட்டே
வந்தபேருவகையினுடல்பரவசமாகிச்

சிந்தையாற்றியானித்தினிதிருந்தனன்சிவனே
விந்தையாமுனிவரனதிசயித்துளம்வியந்தே. (உக)

மன்னர்மன்னவவிசுரவாக்கியம்வழங்க
வென்னபுண்ணியஞ்செய்தனையோசெகதீச
னுன்னிடத்தினிலுவப்பதாயிருப்பதுமுளதாஞ்
சொன்னவேழ்வியைமுடித்திடும்படிக்குநீதுவக்காய். (உஉ)

ஆழ்புனற்பொருனையின்கரையதனிலேயமைவாம்
வேழ்விச்சாலையுந்திரவியவகைகளும்விரைவாற்
றூழ்விலாவகையியற்றெனமுனிவரன்சாற்றச்
சூழ்கடற்புவியரசனுமமைச்சர்பாற்சொல்வான். (உங)

தண்பொருனையின்கரைதனில்யாகசாலைகளும்
விண்படுந்திரவியங்களுமிகுதியாயமைப்பீர்
மண்படும்முலகினிலுளமறையவர்க்கூவி
எண்படும்பெருவேழ்வியாமியற்றுகவென்றே. (உச)

மந்திரிகளேயேவினன்வையகமன்ன
னந்தலில்சமதக்கினியரசனைநோக்கி
யிந்தவேழ்விசெய்வதற்குளகுணமெழில்வேக
முந்துவாம்பரிதெரிந்ததைமந்திரமுறைபால். (உ௫)

சாந்திகள்செய்துசாத்திரவிதிப்படிதன்று
லேய்ந்தநற்கிரியையும்புரிந்திடுமவரிடத்தில்
வாய்ந்தவாம்பரியுதவியேவளர்த்திடவேண்டு
மாய்ந்தகேழ்வியிலுயர்ந்தவுபாத்தியாயரையும். (உசு)

கூட்டியப்பரிகுவலையந்தனில்விடவேண்டுங்
கேட்டிமன்னவவெனமுனிமொழிவதைக்கேட்டு
வாட்டிறன்மனன்குருமொழிதனிலணுவழாம
னாட்டும்வேழ்வியிற்குள்ளனமுறைநடத்தினனால் (உஎ)

ஓமசாலைகள்வேதிகைகுண்டங்களுமேற்றிக்
காமர்போற்றிடவிதம்விதமாயலங்கரித்துச்
சேமமேமுதலாகியதிரவியவகைக
ளாமெனும்படிக்கமைச்சருமமைத்துவந்தறைந்தார். (உஅ)

அரசன்மந்திரித்தலைவர்களன்றந்திடக்கேட்டே
விரைவினாலெழுந்தருட்குருபரனிடமேவித்
தரையில்வீழ்ந்தவரடிபணிந்தெழுந்துநற்றவத்தோ
யொருபுதல்வனில்லாமையால்மனந்துயருளந்தே. (௨௯)

இந்தவேழ்விசெய்திடுவதாய்மனமிசைவாகி
வந்ததாகுநும்மிடத்திலென்றுரைத்தனன்மன்ன
னந்தவாய்மொழிகேட்டலுமுனியகமகிழ்ந்து
சிந்தையோர்ந்தருந்தவரொடுமெழுந்தனன்சிறப்பாய். (௩௰)

வான்முகட்டுலவியமகச்சாலைவந்தெய்தி
நான்முகன்னிகர்மறையவர்கூடிநல்விதியான்
மேன்மையாகியவசுவமேதத்தினைத்துடங்கி
யானவேழ்விசெய்தரசனுக்கணிநலமளித்தார். (௩௧

அத்தகையவேழ்வியைமுடித்தரசனுக்கினிதா
முத்தமக்குணமானவுபாத்தியாயரையு
மெய்த்தவத்தினராகியவேதியர்முதலா
மத்தமூவகைவகுப்பினராமிகுதளமும். (௩௨)

பெருக்கிவையகமன்னவன்றன்னுடன்பிறந்தோன்
பருக்குனன்றனையொப்பவனாகும்வேற்றரசர்
தருக்கினுக்கிளையாதவன்தருமசிந்தையனா
யிருக்குஞ்சத்தியகீர்த்தியுங்கூடவெய்திடவே. (௩௩)

ஓகையோடுநன்னிதிக்குவைவேண்டுவவுதவி
யாகசாலையிலெரிமுகத்தாகுதிகொடுத்து
மாகவானவர்வியப்புறமந்திரவிதியால்
வேகவாம்பரிதனைக்கடலுலகினில்விடுத்தான். (௩௪)

புரவிமுன்செலத்தம்பியுர்தளமும்பின்போத
வுரைசிறந்தமாமறையவருடன்தொடுத்தேகிப்
புரையிலாதனகருமங்கள்பின்புரிந்திடவே
விரைவினாற்பரிகுணதிசைதன்னில்மேவியதே. (௩௫)

அக்குணத்திசைதனிலுளதுட்டரையடக்கித்
தெக்கணத்திசைநோக்கியேபுரவியுந்திரும்பிப்

புக்கபோதிலத்திசையுளமன்னவர்பொருந்தி
மிக்கசத்தியகீர்த்தியைவணங்கினர்வெருவி, (௩௬)

வணங்கிமன்னவருடன்வரமனமகிழ்வெய்திக்
குணங்கொள்வாம்பரியினைக்குடதிசையினில்விடுத்தே
பணங்கொள்சூட்டராசுமந்தபார்நெருங்குபல்படையோ
டிணங்கியப்புரவியைத்தொடர்ந்திளவலுநடந்தான். (௩௭)

குடதிசைப்பரிசெலவிதிமுறைகுறையாமல்
நடவியேவரும்பொழுதினிற்சயிலநாயகரும்
புடவிகாவலன்சுதர்சனன்றனைமிகப்புரக்குங்
கடமையாற்றிருவுளத்தினிற்கருணைகூர்ந்தருளி. (௩௮)

முந்தவெய்யசூர்முடித்தயிற்கடவுள்சண்முகவன்
றந்திமாமுகற்கிளையவன்சரவணத்துதித்தோன்
கந்தவேள்மலர்க்கடம்பனைக்கருணையானோக்கி
யெந்தையாஞ்சிவசயிலனாயகனியம்பிடுமால். (௩௯)

சிட்டமாமறைமுனிவரர்சிறுவராய்ச்சென்றே
யட்டதிக்கையுமடக்கியித்திசையினிலளவில்
மட்டிலாதவேகத்தொடுவரும்பரிபற்றிக்
கட்டுவாயொருதருவினிலென்றனன்கடவுள். (௪௰)

அண்ணலார்திருவருள்புரிந்திடவிரைந்தாங்கு
புண்ணியன்மறைமுனிவரர்சிறுவராய்ப்போந்தே
யெண்ணிலாதபதாதியினிடைவரும்பரியைக்
கண்ணினாலெதிர்வந்திடக்குமரவேள்கண்டான். (௪௧)

கண்டபோதுபதாதியாங்கடலையுங்கடந்து
யண்டர்நாயகன்மகன்விளையாடுவான்போல
மண்டுவேகமாய்வரும்பரிமலர்க்கையாற்பற்றிக்
கொண்டுபோயொருதருவினிற்பிணித்தனன்குமரன். (௪௨)

இச்செயல்கண்டுசத்தியகீர்த்திமற்றினையோர்
பச்சிமத்திசைநடவியபண்புடைப்பரியை
யச்சமில்லவனாகவோராருமறைச்சிறுவன்
மிச்சமாகவும்பற்றினனெனமனம்வியந்தே. (௩௩)

செழுமறைக்குலச்சிறுபிளாயாவனீயெமது
வழுவின்வேழ்வியால்வரும்பரிதனைமதியாதிப்
பொழுதுபற்றிநீபிணித்தலையறிவிலார்போலப்
பழுதுவந்துறும்விரைவில்நீவிடுகெடும்பரியை. (சச)

என்றுசத்தியகீர்த்திமற்றியாவருமிசைத்தார்
நின்றமாமறைச்சிறுவனுமவரைநேர்நோக்கி
நன்றுநன்றுநும்விடுவதில்மற்செய்துநம்மை
வென்றுநும்பரிகொள்ளுவீரெனவிளம்பினனால். (சரு)

அவ்வுரையவர்கேட்டலுமதிசயித்திவன்மேல்
வெவ்வமர்புரிந்துடல்செகுத்திடுவதாய்வெகுண்டே
பவ்வமார்த்தெழுந்ததுவெனச்சிறுவன்மேற்படர்ந்தா
ரெவ்வமில்லதோர்குறுமுனியெனநின்றனெங்கோன் (சசு)

செய்யநான்மறைச்சிறுவனென்றெண்ணினோமவனுங்
கையிலேந்தியவேலுமாய்நின்றனன்கண்முன்
வெய்யநாமிவன்றனைக்கொன்றுற்றோடமேவாதென்
றையநீங்கியேசிறுவனைவளைந்தமர்புரிந்தார் (சஎ)

சூலமாமழுத்தனுவினிற்றொடுசரம்பிண்டி
பாலமேமுதலாகியபற்பலபடைகள்
வேலனுமறைச்சிறுவன்மேல்விடுத்துநின்றார்த்தார்
சாலவுந்நகைபுரிந்துநின்றனன்சிவன்றனயன் (சஅ)

விட்டபற்பலபடையெலாமவன்றிருமெய்யிற்
பட்டபோதினிலொன்றுநூறாய்த்துணிபட்டுக்
கெட்டவாறெலாங்கண்டனர்கிளரொளிக்கதிர்வேல்
தொட்டுவிட்டனன்சூரிருள்தொலைத்திடுந்தொல்லோன் ()

வேறு.

கடகரித்திரளிலேயோரரிகனன்றெழுதல்போலும்
படவரவினத்தைத்தாக்கும்படர்சிறைக்கலுழன்போலுங்
கடவரைதனிலுஞ்சூரன்றனுவரைதனிலும்விட்ட
சுடர்விடுகதிர்வேல்சென்றுதுணித்ததச்சேனையெல்லாம் (ருo)

இச்செயல்கண்டுசத்யகீர்த்தியுமெழுந்துபோந்து
வச்சிறுமறையோன்றன்னையடர்த்ததிகோபனாகி
மெச்சியமறைப்பிள்ளாய்நீமேல்விளைவதனையோரா
தச்சமற்றிகுதுசெய்தாயறிவிலோய்பரிவிடாயேல். (ருக)

பெருமறைக்குலத்துக்கெல்லாம்பிழையெனப்பிறந்தபேதாய்
மருவலனாகநின்றாய்மறையவனென்றும்பாரே
னிருநிலங்காக்குமன்னர்க்கிரக்கமிராதுன்றன்னை
விரைவினிற்கொல்வேன்வெய்தின்விடுபுரவியினையென்றான். (ருஉ

என்னவும்புகன்றமாற்றமிருசெவிவெதுப்பக்கேட்டுப்
புன்னகைபுரிந்துநீயும்போர்த்தொழிற்குரியனாகி
லென்னைநீசெயித்துக்கட்டியிருக்கின்றபரிகைக்கொண்டே
நின்னுடைநகரிற்செல்வாயென்றனனிகரிலாதான். (ருங)

சிறுமறையவன்சொல்மாற்றஞ்செவிப்புலன்றன்னிற்கேட்டு
மறுமொழியுரைப்பதின்றிவரிசிலைகரத்தில்வாங்கி
யுறுகணையைந்துதொட்டேயுருமெனச்செருபவிட்டா
னறுமுகக்கடவுள்வேலாலதுபொடியாகச்செய்தான். (ருச)

தடக்கையிலிருந்தவேலைச்சத்தியகீர்த்திமீது
விடப்பதைப்பொடுங்கிமண்மேல்வீழ்ந்தனன்வீழ்தலோடும்
கடற்பெருந்தானைதன்னிற்கழிந்தவர்போகநின்றோ
ரடற்கஞ்சியிரிந்துபோனாரரசனுக்குரைப்பதாக. (ருரு)

சென்றவர்மணலூர்சேர்ந்துசுதர்சனன்றன்னைநோக்கி
வென்றிவேலிறைவவேழ்விவிடுத்தநம்பரிகிழக்கு
தென்றிசைதனையும்வென்றுகுடதிசைதிரும்பித்தாங்கே
நின்றொருமறையோன்மைந்தனேரலனாகப்போந்தே (ருசு)

கடும்பரிதன்னைப்பற்றிக்கட்டினன்புரவிதன்னை
விடும்படிக்கிளவல்போந்துவேண்டியதுரைத்துங்கேளா
தடும்பரிசுடையவெம்போராற்றினனவனைச்சுற்றி
யிடும்பொழுதவன்கைவேலாலிளவலைத்தரையில்வீழ்த்தான் (ருஎ)

எனவவர்புகன்றமாற்றமிருசெவிதனிலுஞ்செய்பைக்
கனலுறக்காய்ச்சிவார்த்ததெனமனங்கனன்றுமன்னன்

சினமதகரிகள்மான்றேர்திறல்வயப்பரிகள்வெற்றிக்
கனைகழல்வீரரோடெங்கடலெனப்புடவிமீது (ருஅ)

ஆர்த்தெழுமோசையண்டமளந்தனவமரர்யாரும்
வேர்த்திடுமெய்பராகிவிண்ணைவிட்டகல்வதானார்
போர்த்தொழிற்குறியனாகிப்புரவலன்போந்தபோது
தேர்த்தடஞ்சில்லியோசைதிசைசெவிடெறிந்ததன்றே (ருகூ)

கதமுறுகலினப்பாய்மாகாலின்மேன்மிதப்பக்காட்டி
மதகரிக்கலுழியாறுமண்மிசைபரந்துசெல்லப்
புதையிருளொழிக்கும்வெய்யோன்பொழிகதிரென்னவீர
ரதிர்குரலெழுப்பியேந்துமயிற்படைவெயிற்குலாவ (சுய)

கொற்றவெண்கவிகையீட்டங்கோடிசந்திரர்கள்வானி
னுற்றிடுங்காட்சிகாட்டவுயர்நெடும்பதாகைமேல்பாற்
பெற்றிடுமதியமெண்ணில்பிறங்கினதென்னமாதர்
கற்றையங்கவரிவீசக்கால்செய்வட்டங்களாட. (சுக)

ஆடகத்தடந்தேர்பூண்டவணிமந்த்ரைவானிற்றுவ
மடுறநெருங்கிவெய்யவரிசிலையுழவர்செல்லக்
கேடகம்புடைத்தமஞ்சின்கிளரொளியெனவுங்காட்ட
நாடருந்தடத்திற்போன்றுநகைக்கும்வாளுழவர்போத. (சுஉ)

சல்லடந்துடாரிபம்பைதண்ணுமைதுடிநற்பேரி
பல்லவவாத்தியஞ்சேனைபாவையின்குரைகள்காட்டச்
சொல்லருந்தாரைகாளஞ்சிறுவளைசின்னத்தோடும்
பல்லிபந்துவைக்குமோசைபரந்தது திசைகளெங்கும். (சுஙு)

செங்குருதிகளைக்காலுந்திருந்தயிற்புலவுவேட்டுக்
கங்கம்விண்பரந்துசெல்லக்கையுறுவேலைநீங்கிப்
பொங்கிபவுளைகயோடும்பொசிப்பினுக்கிடமாச்சென்றே
யங்கைகள்புடைத்துப்போந்ததளப்பிலவலகைகூளி (சுச)

வேறு.

எல்லவன்ஞெளிகரந்தனகவிகையீட்டத்தாற்
கொல்லிமன்னவன்கொடிபெடுங்கினமதிதலத்து

வல்லவன் மகரக்கொடிவருதலாற்பனைத்தார்
வில்லவன்கொடிநாணொடும்வணங்கினவெருவி (௬௫)

புரையிலாநவமணிமகுடத்தின்மேற்பொலிய
விரைசெய்வாகையும்புனைந்துவீரக்கழல்வீக்கி
யுரைசிறந்தபஞ்சாக்கரகவசமுச்சரித்து
வரைகொள்மெய்யில்வெண்பொடிதரித்தொளிறுவாள்வாங்கி

பொங்குமின்னிசைவீணைநல்லியாழிசைபொலிய
மங்கலந்தருபாடல்கள்திசைதொறுமலியத்
துங்கமாமறைவேதியராசிகள்சொல்லத்
திங்களின்குலத்துதித்தவன்தேர்மிசைபோனான் (௬௭)

அரசர்வெள்ளமுமமைச்சர்கள்வெள்ளமுநெருங்கப்
புரைசையானையின்றிரள்களும்வரையெனப்பொலியத்
தரைசிறந்திடவெடுத்தபேரனந்தனுஞ்சலிப்பக்
கரையில்சேனைமாக்கடல்நடந்ததுகடுகெடுப்பில் (௬௮)

கொய்யுளைவயப்பரிநடத்தியகுரத்தூளி
வையமெங்கணும்பரந்துமீக்கொண்டனவளர்ந்து
செய்யவானமாய்த்தூர்த்தலாற்செழுங்கதிர்பரப்பும்
வெய்யவாதபங்குளிர்ந்ததுமறைந்ததுவிசும்பு (௬௯)

விரைவினேகியசேனைமாக்கடலிடைவிளங்கும்
புரைசையானைகளிருசெவியசைப்பதுபொருப்புக்
கரசதானமைநாகவெற்பிருசிறகடித்துப்
பரவைதன்னிலுலாவுதல்போன்றனபலவாய் (௭௦)

இன்னதன்மையின்சேனைகளுடன்விரைந்தெழுந்தே
மன்னர்மன்னனுங்குடதிசைநோக்கியேவருவா
னன்னகாலையிலருமறைச்சிறுவனுங்குமரன்
மின்னகுசுடர்விடுங்கதிர்வேல்கையில்விளங்க (௭௧)

பிடித்துமின்றனன்குணதிசைமுகப்பிரியாம
லடுத்துவந்திடுஞ்சேனைகாவலருமார்ப்பரித்துக்
கடுத்தவாண்முகமுடையராய்க்கட்பொறிகதுவ
மடித்தவாயெயிற்றுன்னிநாற்றிசையிலும்வளைந்தார் (௭௨)

விதுகுலத்துமன்னவனிருகண்ணுறவிளங்குங்
கதிரயிற்படைக்கரத்தராய்க்கருணையங்கடலா
யதிசொரூபராயருமறைச்சிறுவராயவற்று
ளெதிர்துலங்கிடக்கண்டனனிரதநின்றிழிந்தே (எ௩)

சேனைவீரரைநிறுவியேதிறலடர்ப்படர்க்கை
மீனவனெதிர்விளங்கியசிறுவரைநோக்கி
ஞானவீரராய்நான்மறைமுனிபுதல்வனுமா
யானனந்திருவருள்சொலிப்பவருமாயழகாய் (எச)

வாய்ந்தமெய்யராய்மன்னுயிர்தனைப்புரப்பவரா
யேய்ந்தநற்புயமுடையராயருளிலக்கணராய்த்
தோய்ந்ததேசுவுடையராய்நலந்துலங்கினரா
யாய்ந்தகல்வியராய்ச்சகலமுமறிந்தவராய் (எ௫)

கண்டவர்மனங்கவர்ந்திடுபவருமாய்க்கதிர்வேற்
கொண்டகையராய்க்குணப்பெருங்கடலுமாய்நின்ற
பண்டைநான்மறைச்சிறுவர்நீர்யார்பதியாது
விண்டுரைத்திடீரென்னவேவிளம்பினன்வேந்தன் (எசா)

பெருவயத்திறன்மன்னவனிவ்வகைபேச
வொருதனிமறைச்சிறுவரும்வேந்தனுக்குரைப்பார்
பொருகளத்தினிலமர்த்தொழிற்புரிந்திடப்போந்து
மருவலர்க்கிதவசனங்கள்வழங்குவவழக்கோ (எஎ)

சமர்புரிந்திடத்துடங்கியேயளப்பருந்தானை
திமிரவேலைபோல்வளைந்தனைபோர்செய்வதின்றி
நிமிருநன்மொழிமாற்றலர்முன்னின்றுநிகழ்த்தி
யமர்புரிந்திடன்மறப்பதுமன்னவர்க்கழகோ (எஅ)

நேத்திரமனமாண்மைநேரலர்மிசைநிறுவிச்
சாத்திரப்படிபொருவதுபுரவலர்தருமங்
கோத்திரங்குலங்குணங்களுங்கேட்டுமுன்குறுகித்
தோத்திரங்கள்சொல்வதும்படைவீரர்க்குத்தொழிலோ (எகூ)

என்றுமாமறைச்சிறுவனுங்குமரவேளியம்ப
நின்றமன்னவன்வெகுளியாய்நெஞ்சகங்கனன்று

வென்றிவேற்படைத்தானையையேவியேவிரைவாற்
சென்றுவாம்பரிபிணித்திடுந்தேரிலேறினனால் (௮௰)

தேரிலேரியேசினமதகரிவயப்புரவி
வீரர்யாவரும்வெவ்வமர்விளைத்திடுங்காட்சி
சூரியன்றனையிருளணுகினதெனத்தோன்றக்
கூரிலையவேற்குமரவேள்குறுநகைபுரிந்தார். (௮௧)

ஆனகாலையிலயிற்படையயின்முகப்பகழி
சேனைகாவலர்விடுத்தனர்திசைதொறுஞ்செறுமி
மீனவன்சிலைவாங்கியேசிறுவர்மேல்வெகுண்டு
வானமாரிபோற்பொழிந்தனன்வடிக்கணைதெரிந்து. (௮௨)

நின்றடாமறைச்சிறுவராய்நிகரிலாதவரும்
வென்றிவேல்கரத்திருந்ததைவிடுத்தனர்மிகவு
மொன்றுபத்துநூறாயிரமளவில்பல்லுருவாய்ச்
சென்றுசேனையிற்றாக்கினதிமைப்பிலார்திகைப்ப. (௮௩)

அளப்பிலாதகூரயிற்படைதிசைதொறுமணுகித்
தளக்கடல்சுவறிடவுடற்றலைகளைத்தடிந்து
களப்படுத்ததுவெண்ணிலாக்கவந்தம்நின்றாட
புளைக்கையானைகள்கிடந்ததுவரையெனப்புரண்டு. (௮௪)

தந்திகள்மருப்புகடனையயிற்படைதடிந்தே
சிந்தியவிசைதனிற்பலவாகமேற்றிசையிற்
பந்திபந்தியாய்விண்மிசைபடர்ந்தனபகரி
லந்திவான்பிறையென்னவும்வயங்கியதாமால். (௮௫)

விண்ணளந்திடுங்கொடிகளுமறுந்துகீழ்விழுவ
தெண்ணிலாதனபறவைகளிறந்தபுட்கலத்தை
யுண்ணவானகமிழிந்துலவியதனையொப்ப
மண்ணளந்திடும்போர்க்களமெங்கணுமலியும். (௮௬)

கூரயிற்படைதிசைதொறுந்திசைதொறுங்குழுமுந்
தேரினையறுத்ததிற்பிணித்திடும்பரித்திரள்க
ளூர்பதங்களையறுத்திடவரைகள்போலுருண்டு
பாரிடத்தினிற்கிடப்பனபொருகளப்பரப்பில். (௮௭)

அலகைகூளிகோமாயுமாண்டவர்குடற்பிடுங்கிப்
பலவகையிழுத்திடுங்குடற்பின்னலைப்பார்த்து
வுலவியபருந்தெருவைகள்மண்ப்பயமுற்று
வலைவளைந்திருப்பதுவெனவானிடைசுழலும். (அஅ)

மையன்மாமதவாரணம்பரிதிறல்வயவர்
மெய்யில்வேனுழைந்திடுபுணீர்பெருகியேமிகவும்
வையமெங்கணும்பரந்துபோரறெனவரலாற்
செய்யவானகமானதுகுருதியாற்சிவந்தே. (அகூ)

இன்னதன்மையவாகியகீழ்மையுமெழில்வேல்
முன்னவன்செயுமாண்மையுநோக்கியேமுடுகி
மன்னவனிரதத்தினையூர்ந்துமால்வருணன்
பொன்னகர்க்கிறைசரங்களுமழையெனப்பொழிந்தான். (கூ0)

அக்கணைகளையயிற்படைதனைவிடுத்தறுத்தே
முக்கணாயகர்புதல்வருங்குறுமுறுவலித்தார்
திக்கைவென்றிடுசெழியர்கோன்தென்றிசைத்தருமன்
மிக்கதாம்விதிதனபதிசரங்களைவிடுத்தான். (கூக)

விடுத்திடுஞ்சரங்களைப்பொடிபடுத்தியேவெற்றி
கொடுத்திடுங்கொடித்தேரினைகூறுகூறாக்கிப்
பிடித்தங்கச்சிலைதனையறுத்தரசர்கள்பெருமான்
படித்தலத்துறவிடுத்தனர்கதிரயிற்படையார். (கூஉ)

விடுத்தவேற்படைமருமமூடுருவிட்வேந்தன்
முடித்தவாகையுமகுடமுங்கீழுறமுதிருங்
கடுத்ததும்பியகண்டரைநெஞ்சினிற்கருதிப்
படித்தலத்தினில்வீழ்ந்தனன்பதைப்புகளொடுங்கி. (கூங)

மீனவன்பதைப்பில்லனாய்மேனியுமொடுங்கி
மானிலத்தினிற்கிடந்தனன்மயக்கம்நீங்கியபின்
ஞானமாமுனிச்சிறுவராங்குமரனாயகரும்
பானுமேற்றிசையுதித்ததுபோன்றனர்பார்த்தான். (கூச)

அருள்பெருகியவுருவராயவ்வயினுதித்த
மருளொழித்திடும்வடிவராய்க்கருணைவாருதியா

யிருள்கெடுத்திடுங்கதிரயிற்படையராயெதிரே
யொருதனிச்சிறுகுமரர்நின்றதைக்கணுற்ருன். (கரு)

(வேறு)

கலிவிருத்தம்.

இடம்படுமனப்பயமென்பதின்றியே
வுடம்பினிலணுவடுவென்பதில்லராய்த்
தடம்புயம்வளர்ந்தநற்றருமமூர்த்தியாய்க்
கடம்பராஞ்சிறுவரைக்கண்ணிற்கண்டனன். (கசு)

துக்கசாகரங்களைத்தொலைத்தியாவர்க்கு
மிக்கதாம்பரகதிவீடுநல்கவே
புக்கதண்கடனையும்பொருவிலன்னதி
தெக்கணங்கோயிலுக்தெரியநோக்கினன். (கஎ)

கண்டிடுமளவினிற்கவலைபோக்கியே
புண்டருகுருதிகள்பொழியப்போதநீர்
மண்டலைக்கடனையின்மன்னர்மன்னவன்
கொண்டபேரன்பினாற்குளிரமூழ்கியே. (கஅ)

ஒருவரைக்கொடுமுடியுடையமேருவாம்
பெருவரைச்சிலையரைப்பெருமையாளரை
யருவரைப்பரமகலியாணிநாதரை
யிருகடிகைப்பொழுதிருந்துசிந்தித்தான். (கக)

ஐந்தெழுத்துச்சரித்தண்டநாதரைச்
சிந்தையாற்றியானித்துத்திருந்துமன்பினால்.
மந்திரஞ்சோடசவகைகளாலுமே
புந்தியான்மானதபூசைபண்ணினன். (ா)

அந்தரியாகமுடித்துச்சோமனற்
கந்தவிநோதரைக்கருதுமன்பாற்
சந்ததம்வளர்சிவசபிலநாதரைச்
சிந்தையிற்றெழுதுதோத்திரங்கள்செப்பினன். (கoக)

(வேறு)

கலித்துறை.

அரியானேஅருமறையின்பொருளேபோற்றி
யகிலபுவனமும்படைக்குமமலாபோற்றி

பெரியானேபெருமையளவில்லாய்போற்றி
பெருங்கருணைமலையேபிஞ்ஞகனேபோற்றி
பரிவானவுயிர்ப்பசுவின்பதியேபோற்றி
பரமகலியாணிமணவாளாபோற்றி
தரியார்முப்புரமெரித்தநகையாய்போற்றி
சங்கராசிவசயிலசம்போபோற்றி. (க௦உ)

அண்ணலேகனகசபைக்கழகாபோற்றி
யருமறைவேழ்விக்கியமானுவாய்போற்றி
பண்ணியநல்வேழ்விபயன்றருவாய்போற்றி
பார்பதிசமேதபரஞ்சுடரேபோற்றி
கண்ணுதலேபோற்றிகந்தரத்தாய்போற்றி
கவலைகளைந்திடுங்கருணைக்கடலேபோற்றி
தண்ணிதழிமுடித்தசடாடவியாய்போற்றி
சங்கராசிவசயிலசம்போபோற்றி. (க௦ங)

என்னவுநற்றோத்திரங்களிசைத்தேகண்க
ளிரண்டினுமானந்தவெள்ளமெடுத்துச்சோரச்
சன்னதியில்நின்றுபரவசமாய்மன்னன்
றனைமறந்துகம்பிதமுந்தாவேமுக்கண்
முன்னவாசிவசயிலமுதல்வாவென்னை
முழுதுநீதடுத்தாட்கொண்டருளவேனின்
பொன்னடியிற்சரணடைந்தேனடைந்தேனென்று
புவியில்விழுந்தெழுந்துபதம்போற்றிநின்றான். (க௦ச)

கங்கைமதிமுடித்தசடாடவியுநீல
கண்டமுமுக்கண்ணுமெழிற்கரங்கள்நான்கிற்
றங்கியமான்மழுவபயவரதந்தோன்றத்
தையல்கலியாணியொருபாகமாகப்
பொங்கொளிவெண்பொடிமேனிபொலியவெள்ளிப்
பொருப்பனையவிடையேறிப்புடையில்வேதன்
செங்கணெடுமாலமரர்முனிவர்சூழச்
சிவசயிலபதிசுதெரிசனன்முன்னின்றார். (க௦ரு)

அமையாததிருவருளாயண்ணறோன்ற
யரசர்பெருமான்பொறிகளைந்துமொன்றா

யிமையாதவிழிகளினுனோக்கிநோக்கி
யின்பவெள்ளத்திடைமூழ்கியிருகைகூப்பி
வுமைபாகர்திருவடித்தாமரையைப்போற்றி
யுரைகுழறிப்பெருங்காதலுடனேமண்ணிற்
சுமையானசெனனமரணங்கடன்னைத்
துடைத்தருள்வாயென்றுபின்னுந்தொழுதுவீழ்ந்தான்

(வேறு)

கலித்துறை.

ஈசர்திருவுள்ளமகிழ்ந்திரங்கியெமைமானிலத்திலினிமையாகப், பூசனைசெய்ததினுலும்பொருவரியவேழ்விசெய்புண்ணியத்தினுலும், பாசவினைத்தொடக்கறுத்தெம்பதந்தருவோமெனப்புகலும்பணிகளோடு, தேசுமதிமுடித்தசடைச்சிவசயிலபதியருளிச்செய்வதானர். (கoஎ)

என்றுமறைமுனிவருக்கிக்கதையையெடுத்தியம்பியிகலைவெல்லும், வென்றிவடிவேற்கரத்துவழுதியர்கோன்றனக்கிறைவன்வெளிவந்தெய்தி, நன்றுதவும்வரம்பலவுநல்லவருமகப்பேரும்நயந்தகாதை, யொன்றுளதுகேண்மினெனச்சூதமுனிமாதவருக்குரைப்பதானன். (கoஅ)

8-வது சுதெரிசனபாண்டியன் வேழ்விச்சருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் கோஎ.

ஒன்பதாவது

# சுதெரிசனபாண்டியனுக்கனுக்கிரகமானசருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இவ்வகைச்சூதன் கூறவிருந்தவமுனிவரெல்லாஞ்
செவ்வியசிந்தையின் பந்தெவிட்டிடத்தவத்தின்மிக்கா
மொவ்வரிதானசூதமுனிவனையுவந்துநோக்கி
யெவ்வமிலாதமன்னர்க்கருளியதியம்புமென்றார். (க)

மாதவமுனிவர்கூறமனமகிழ்வெய்திமெய்ம்மைச்
சூதமாமுனிவன்சென்னிதுளக்கினன்கென்றுகூறி
வேதன்மாலறியவொண்ணுமெய்ப்பொருளெளிதாய்மீன
கேதனன்றனக்குத்தோன்றிக்கிருபைசெய்வதருள்வதானன். (உ)

உன்னுடைப்பத்திபோலுமுலகினிற்கண்டதில்லை
யுன்னுடையன்புபோலுமுயிர்வருக்கத்துமில்லை
யுன்னுடையுண்மைநம்மையுணர்ந்திடுமுண்மையாவ
தென்னவுமறிந்தோம்நின்போலெமக்கடியவருமுண்டோ. (ங)

புரந்தரன்முதலாயுள்ளபொன்னுலகத்துளோரும்
பரந்தபேருலகையுண்டோன்பதுமத்தோனிவர்களுன்போ
னிரந்தரபத்தியில்லார்நினக்குநீமானும்நெஞ்சி
லரந்தைதீர்த்துனக்குவேண்டுமிட்டமுமளிப்பதாக, (ச)

நீவிடுபரியைப்பற்றிநில்லெனக்குமரன்றன்னை
யேவினேம்பத்திசோதித்திடுவதாயிறக்கவந்த
நோவினுமுளக்கணம்மைநோக்கினையுடலைவிட்டே
யாவிபோம்பொழுதுநம்மையயர்ப்பையோயயர்ப்பிலாதோய், (ரு)

வேண்டுநல்வரங்கடன்னைவிளம்பெனவிமலன்கூற
வாண்டனுபகனேமுக்கணமலனேகமலத்தோனு
நீண்டமாலவனுங்காணுநின்மலாநிகரில்வாழ்வே
தாண்டவப்பதத்தாய்சம்போசரணமென்றடியில்வீழ்ந்தே. (சு)

உரைதடுமாறிரோமஞ்சிலிர்த்திடவுடல்கம்பித்தே
யிருவிழியருவிசோரவிணைமலர்க்கரங்கள்கூப்பிக்
கரையிலானந்தவெள்ளக்கடலிடைமூழ்கிமன்னன்
றரையிடைக்கிடப்பதானான்சயிலநாயகருநோக்கி. (எ)

தொழுந்தகைமையினில்வல்லசுதரிசனனேநீயு
மெழுந்திராயெழுந்திராவென்றிபம்பியேயஞ்சலென்று
செழுந்திருவபயவத்தந்திருவருள்புரிந்தார்ஞானக்
கொழுந்தெனவெழுந்துமன்னன்பரிவொடுங்கூறலுற்றான். (அ)

அண்ணலேயெனதுநெஞ்சுன்னடிசிந்தித்திருத்தல்வேண்டு
மெண்ணிலாதெனதுநாமம்நாவினுலியம்பவேண்டும்
புண்ணியாவெனதுகாவல்புகழைமேபொருந்தவேண்டுங்
கண்ணியான்கண்டயாவுஞ்சிவமெனக்கருதவேண்டும். (கூ)

துன்புறுகாயஞ்செய்யுந்தொழில்கள்நின்பணியதாக
வின்புறவேண்டுநாயேற்கித்தலந்தன்னிலேமேப
ரன்பருள்செய்தலாலேயகன்பதியிதனையாரு
மின்புரைசடையாயன்பூரென்னவும்விளம்பவேண்டும். (ய)

திமிரவேலையினிற்சூர்மாச்சேதித்துச்செழும்பொன்னாட்டி
லமரர்தஞ்சிறையைமீட்டவயிற்படைக்கடவுளென்மேற்
சமரம்வேட்டெழுந்துவெம்போர்தருக்கியதலத்தைநாளுஞ்
சமரவெள்களமதென்றேகுவலயங்கூறவேண்டும். (யக)

இன்னணம்வரங்கள்வேண்டுமென்றிசைத்திடலுமுக்கண்
முன்னவனுணர்ந்துவேந்தன்முகந்தனைநோக்கிநீயுஞ்
சொன்னநல்வரங்களியாவுமளித்தனந்தோன்றவீறிற்
றன்னிகரில்லானந்தஞ்சாயுச்சியமளிப்போமென்றார். (யஉ)

அரும்பெறற்றம்பியோடுமமைச்சருமானையூர்மாப்
பெரும்படைத்தலைவர்யாரும்பிழைப்பறக்கருளிச்செய்தோம்
பொரும்படையெழுதனேக்காய்பொங்கெரிமகத்தில்விட்டு
வரும்பரிதனையுங்கொண்டுன்மானகரடைதியென்றே. (யந)

அருந்தவவேழ்விமுற்றுமாற்றுதியந்தவேழ்வி
புரிந்திடுமுடிவினல்லபுதல்வனுக்குபரன்றன்னைப்

பெருந்தவப்பயத்தாலுன்பாற்பிறந்திடச்செய்வோமிற்குத்
திருந்தலர்தம்மைவெல்லுஞ்செயற்படைகோடியென்றே. (௰௪)

சூலமுமழுவுமீந்துசுரர்நராசுரருமற்றுங்
காலங்கொள்ளுலகிலுள்ளோராரையுஞ்செயிக்குங்காண்டி
ஞாலமீதின்னம்வேழ்விவேண்டுவநயந்துசெய்தே
சாலவுங்கிளைகளோடுஞ்சவுபரிகிளைபோல்வாழ்தி. (௰௫)

மாகடலுலகுதன்னின்மன்னவரெவர்க்குங்கிட்டாப்
போகமும்பொசித்துவையம்புரத்தியென்றமலன்கூற
வாகம்பூரித்துமன்னனடிக்கடிபதத்தில்வீழ்ந்தே
யோகைபொடெழுந்தானம்பனுதவிடவிடையும்பெற்றே. (௰௬)

மன்னவன்றிரும்புங்காலைசண்முகவடிவாய்க்கந்தர்
பொன்னின்மாமயிலின்மீதுபொலிந்துமுன்றோன்றலோடுந்
தென்னவர்பெருமானாயேன்செய்பிழைபொறுத்தியென்று
தன்னகங்குழைந்துபாதத்தாமரைதொழுதுவீழ்ந்தான். (௰௭)

அடியிணைதொழுதுபோற்றுமரசனைக்கருணையாலே
வடிவயிற்கடவுணோக்கிமன்னவர்மன்னாவிந்தப்
படியினிலுன்னையாளும்படிக்கிறையேவலாலே
நெடிதுபோர்விளைத்தோமீதுநின்மலன்செயலாமென்றே, (௰௮)

அறிகுதியுனக்கெம்மண்ணலளித்திடும்வரங்களியாவும்
பெறுகுவையையமில்லைப்பெரும்படைத்தலைவரோடுங்
குறுகியுன்பதியில்வாழ்தியென்னவுங்குமரன்கூற
மறுவில்சிந்தையனாபாங்குவழுதிநல்விடையும்பெற்றே. (௰௯)

போந்திடுமளவிற்றம்பிபொருபடைத்தலைவரோடு
மாய்ந்திடுமறிவின்மிக்கவமைச்சரோமுதலாயுள்ளோ
ரேய்ந்தநற்பிலன்களோடுமெழுந்தனரெதிரேசென்று
வேந்தனைத்தொழுதுநின்றார்விபந்தனரமரரெல்லாம். (௨௰)

மீனவர்பெருமான்வேழ்வியன்பரிதனையுங்கொண்டு
வான்முகடுலவுஞ்சென்னிமணியிரதத்திலேறி
தானைமன்னவர்கள்சூழ்ச்சத்தியகீர்த்தியோடும்
பானிறக்கவரிவீசப்பதாகைபல்லியங்களோங்க. (௨௰௧)

முடங்குளைப்புரவிபொற்றேர்மும்மதக்கரிகள் பூமி
யிடங்கொளாதெழுந்துவிண்ணுடிவணிழிந்திருந்ததென்னுந்
தடங்கொண்மாநகரிற்சார்ந்தே ததைடபடும்வேழ்விதன்னைத்
துடங்கினன் சயிலநாதன் றுணைப்பதமனதிற்கொண்டு. (௨௨)

அந்தநல்வேழ்விதன்னைமுடித்தனுதினமுநீங்காச்
சிந்தனைசெய்துவாழ்ந்தான் சிவசயிலேசன்பாத
பிந்தநன்னிலையில்வாழ்நாள்சுதர்சனனுக்கேயின்ப
மைந்தனுய்க்கந்தவேளும்வந்தவதரிப்பதானார். (௨௩)

வேனில்வேளனையான்செய்யுமெய்த்தவப்பேற்றினாலுந்
தேனலர்கடம்பன்மண்மேற்றிருவிளையாட்டதாயும்
பூனிலம்புரக்குமன்னன்புதல்வனாகவுமுதித்தார்
யானவேலரசர்கோமான்மகிழ்ந்தினிதிருப்பதானன். (௨௪)

மாமறைப்பொருளாமுக்கண்மலையருண்மகவாய்நீபத்
தாமமார்பினராம்வைவேற்சண்முகக்கடவுள்மண்மேற்
கோமகனாதலாலேகுமரபாண்டியனென்றேநன்
னாமமுஞ்சிறக்கமன்னனயப்புறுந்தொழில்கள்பூண்டார். (௨௫)

கலித்துறை.

இம்முறையிலரசுரிமைசெய்துவாழ்நாளெழிற்குமரபாண்டி யனுமினிமைகூறத், தம்முடையபேர்விளங்கும்படியதாகச்சாலி வளமலிநெல்லைத்தலத்தின்கீழ்பாற், செம்மைதருமாமுருகன்குறிச்சியென்றுதிருநகரங்குடியேற்றிச்சிறப்பித்தாங்கே, மும்மையுலகமுந்தொழுதுவணங்கியேத்தமுருகர்திருவாலயமுமுறையிற் செய்தே. (௨௬)

நித்தவிழாமாதவிழாநடப்பதாக நிலைமைகளும்பலவமைத்து நெடிதுகால, முத்தமிழ்நாடரசுரியைசெய்தாரந்தமுறைமைகளைப் பஞ்சவனுமுணர்வதாகிச், சித்தநிலைகளிகூரவாழுநாளிற்சிவசயிலப் பெருமானைச்சிந்தைசெய்தே, தத்துவங்கடன்னையுணர்ந்துலகங் காக்கத்தனையனைவைத்தன்பூரிற்சார்வதானன். (௨௭)

மன்னவனன்பூரடைந்துவைகிவாழ்நாள்வல்லமறையவர்க்கூ விச்சயிலநாதர், சன்னதியிற்றினமுமைந்துகாலப்பூசைதவறாத

படிநடத்துந்தகைமைசெய்தே, தன்னுபெருவாத்தியங்கள்நடனமாதர்தொண்டுபுரிவினைஞர்மற்றத்தொழிலோரந்தச், சின்னமதிற்குறையாமற்றெடுத்தேதநித்தத் திருவிழாமாதவிழாச்செய்வதானன். (உஅ)

திருப்பணிகள்மிகப்புரிந்துமனவாக்காயஞ்செலுத்தியேசிவசயிலப்பெருமானுர்க்கு, விருப்பமுடனவமணிகள்குயிற்றிக்காந்திவிளங்கியபல்பணிகளுடன்விதப்பட்டாடை, பெருப்பமுடன் வேண்டுவனவளித் தேமன்னன்பேருவகையெய்தினன் றன்பேர்ப்பட்டென்று, மிருப்பதெனக்கடனேயிமேலாரணையுஞ்செய்தேயிருநிலத்திலரசபத்தென்றெடுத்துக்கூற. (உகூ)

புறவுகளும்வேண்டுவன திருத்திப்பொங்கர்பூஞ்சோலைபலவளமுமிகவுஞ்செய்தே, சுரர்பணியுங்கயிலாயமிதுவாமென்னச்சுதெரிசனனன் கமைத்துத்தொழும்பூண்டே, யிரவுபகல்சிவசயிலநாதரோடுமெம்மைகலியாணியையுமிறைஞ்சியேத்திப்,பரவையுலகாண்டிருந்தேயந்தியகாலம்பரமசிவசாயுச்சியபதவிசேர்ந்தான்.

அவ்வரசன் மகவாகவுலகில்வந்தவருட்குமரபாண்டியருபவில்கால, மெவ்வுலகும்பணிந்தேத்தவுலகையாண்டங்கினிதிருந்தாரிப்பொழுதுமெழில்களோங்குந், திவ்வியசொரூபருமாயெவரும்பூசைசெய்துவரத்தெரிசனையுங்கொடுப்பதாகிப், பவ்வவுலகினிலிருந்தாரென்றுசூதன்பகர்ந்தனன் மாமுனிவருக்குப்பரிவினோடும்

9-வது சுதெரிசனபாண்டியனுக்கனுக்கிரகமான சருக்கம்முற்றும்.

---

ஆகத்திருவிருத்தம் ருளஙூ௲க.

பத்தாவது

# ரெகுனயகர்பூசித்தசருக்கம்.

கலிவிருத்தம்.

தொல்லைமாமுனிவரன் சூதனோதலும்
வல்லமாதவர்மனமகிழ்ந்துநோக்கியே
சொல்லருஞ்சிவசயிலத்தின்சூழலி
லெல்லையிற்றசரதவிராமலிங்கமும். (க)

புகலரும்வன்னியிலிங்கபூசனை
யகல்விசும்பினர்புரிந்திடுவதாமெனும்
பகருவதாயினைபாங்கரோங்கிய
மகிமைசேர்பாவவினசமாதலம். (உ)

அத்தலந்தனிற்சுயம்பாவதாமெனு
மித்தலநான்கினுளிருக்குந்தேயங்கள்
மத்தியபஞ்சக்குரோசமானிலத்
துத்தமமெனவுமுன்னுரைப்பதாயினும். (௩)

புரியவாஞ்சிவசயிலத்தினற்புதம்
விரிவதாயெமக்குநீவிளம்பினும்மற்றைத்
திரிதலத்துண்மையுந்தேயமத்தியிற்
பிரிவுறுதிருப்பவர்பேறுங்கூறென்றார். (௪)

மாதவமுனிவரிவ்வாறுகூறிடச்
சூதனுமனங்களிதுளங்கவன்னிலை
மூதறிவுடையமாமுனிவர்கேட்பதாய்
மேதகுகாதையைவிளைவிற்கூறுவான். (௫)

பண்டொருகாலம்பூபாரந்தாங்கிய
திண்டிறற்றசரதன்சிறுவனாகியே
விண்டுவவதரித்திருந்துவிண்முத
லெண்டிசைபுரந்திடுமிராமனாகவே. (௬)

அலங்குநீர்வேலையையடைத்திராவணன்
குலங்களோடவனையும்வதைத்துக்கோதறு
மிலங்கையைவிடணர்க்கீய்ந்துமீண்டுவந்
தலங்கொடோளிராமனயோத்திமேவியே. (எ)

உயிர்நிகர்தம்பியரோடுமோனிலச்
செயிரறமனுமுறைசெலுத்திவாழுநாள்
வெயிறவழுலகினின்மிக்கநான்மறை
பயிறருசிறுவன்மெய்பதைத்துமாண்டனன். (அ)

அச்சிறுபுதல்வனைப்பூபுந்தவனையு
மெச்சியதந்தையுமிகுகிலேசரா
யிச்செயல்வருவதென்னிராசவாக்கினை
பொச்சதால்நம்முடைப்புதல்வன்மாண்டனன். (கூ)

என்றவரிருவரின்னுதுசூழ்வரப்
பொன்றினபுதல்வனையெடுத்துப்போந்துடன்
வென்றிவெஞ்சிலையிராகவன்முன்மேவியே
கன்றியமனதொடுங்கதறிவீழ்ந்தனர். (ய)

மண்ணிடைவீழ்ந்தபூம்மறைவல்லோன்படி
மெண்ணிலாத்துயரையுமிறந்தசேயையுந்
தண்ணளியுடன்றசரதவிராமனுங்
கண்ணினேனோக்கிநீகவல்வதென்னென்றான். (யக)

அப்பொழுதருமறையவனுங்கூறுவான்
முப்புவனமுமனுமுறைவழாதுசெய்
செப்பருங்கேண்மையோய்சிறுவனென்றெனக்
கிப்பொழுதவனுயிரிறப்பதாயினன். (யஉ)

என்றலுமனுகுலவிராமனின்மகற்
கொன்றவர்யாவர்நீகூறுகென்றலும்
வென்றிவெஞ்சிலையினய்வேறதாம்பகை
யொன்றுகளாலிவனுயிருமாய்ந்திலன். (யங)

உன்மனுமுறைமைசெய்புலகினீதிக
ளின்மையாலென்மகவிறப்பதாயினன்

நன்மகனுயிரைநீநல்கிடாயெனிற்
றுன்மரணத்துயிர்துறப்பதாகுமேவம். (௰௪)

எனவவனுரைத்தலுமிராமனம்முடை
மனுமுறைநன்றுநன்றென்றுவாய்மையாற்
றனிமறையவன்றனக்கஞ்சல்தந்துமா
முனிவராம்வசிட்டர்நாரதர்முன்னெய்தியே. (௧௫)

அருமறையவன்றுயரறைதலோடுமே
யிருவருமிராமனையினிதுநோக்கியே
தருமநாயகவருந்தவசூத்திரர்
புரிவதாலிப்பிழைபுகுந்ததாமென்றார். (௧௬)

மாதவரிம்மொழிவழுத்தலோடுமவ்
வேதமதகற்றுவதாகவெண்ணியே
சீதரனப்பிழைதெரிவதாய்மனக்
காதல்கூர்தம்பியர்க்கடிதுகூவியே. (௧௭)

மாமறையவனுறும்வருத்தநீக்கிடுந்
தீமைகளுலகினிற்றெரிவதாகவே
போமினீர்குடக்குப்பூருவம்வடாதினி
லியாமுந்தென்புலத்தினிலெய்துவோமென்றே (௧௮)

தம்பியர்தனைத்திசைதனிலுமேவியே
நம்பியுந்தென்றிசைத்தலையினண்ணுகா
லம்புவிவருணவாச்சிரமந்தப்பியே
சம்புகனென்றொருசாதிச்சூத்திரன். (௧௯)

சிவசயிலத்தினுத்தரத்திற்செப்பருங்
குவலயத்துயர்பஞ்சக்குரோசந்தன்னிலே
யவனெடுநாட்பஞ்சாக்கினிமத்தியிற்
றவம்புரிவதைநெடுந்தகையுநோக்கினான். (௨௰)

அண்ணலுமாங்கடைந்தவனைநோக்கியே
புண்ணியநற்றவம்புரியுமாதவ
பண்ணியதவசுமெப்பலனைவேட்டுநின்
னெண்ணரும்பெயர்குலமியாதுசொல்லென்றான். (௨௧

தடம்புவிகாவலப்பேருஞ்சம்புக
னுடம்பொடுகயிலைசென் றுரைவதாகவே
யிடம்படுமாதவமியற் றுமென்குலந்
தொடர்ந்தெழுசூத்திரனெனவுஞ்சொல்லினன். (உஉ)

இம்முறைசம்புகனிசைத்தலோடுமே
செம்மலிராமனுஞ்சீற்றம்பொங்கியே
வெம்முனைவாளினலவனைவீழ்த்தினு
னம்மறைச்சிறுவனுமாவிபெற்றனன். (உஙு)

இம்பரிராமன்சம்புகனையின் னுயி
ரும்பர்சென் றடைந்திடவுடலைவீட்டலா
லம்புவிதனிலவனடைந்தபூமியைச்
சம்புகன்களமெனத்தரணிகூறுமால். (உச)

சம்புகனுடறனைத்தரையில்வீழ்த்தபின்
வெம்பியமனத்தனாய்மிதலையநகி
நம்பனுமிரண்டுநாழிகைவிசாரமா
யம்புவிதனிலிருந்தலக்கணுற்றனன். (உரு)

தவந்தனைச்சிதைத்தனந்தவசியாருயிர்
கவர்ந்தனமிப்பவங்களைந்துநீக்கிட
நவந்தருமூவுலகுக்குநாதனுஞ்
சிவன் றனையன் றியோர்செயலுமில்லையால். (உசு)

என்னவுந்தசரதவிராமனெண்ணியே
யன்னிலைசிவார்ச்சனைசெய்வதாய்மன
துன்னியேபஞ்சக்குரோசவுத்தரந்
தன்னிலேசிவசயிலத்தின்சாய்கையில். (உஎ)

சிவப்பிரதிட்டையுஞ்செய்துபல்லுயிர்ப்
பவக்கடலொழிப்பதாய்ப்பரமனார்தமக்
குவப்பதாயாங்குதன்னுடையபேரதாய்த்
தவக்கடலெனவொருதடமுண்டாக்கினன் (உஅ)

அத்தடதீர்த்தமுமாடியன் பினால்
மொய்த்தெழுகருத்துடன்முருகுவார்மலர்

பத்திரம்வில்வநற்பதமுஞ்சாத்தியே
சித்தமுமொருவழிதிருந்தப்பூசித்தான் (உகூ)

தத்துவத்துடன்வன்னபுவனந்தண்பதஞ்
சித்திகொள்மந்திரங்கலையுஞ்சேர்ந்தவா
றத்துவாவாகியவரியசோதியைப்
புத்தியாற்ரோத்திரம்புரிவதாயினன் (௩௰)

(வேறு)

உலகினுக்கிறைவாபோற்றியுலகசொரூபாபோற்றி
இலகியநீலகண்டா இடர்களைந்திடுவாய்போற்றி
பலபலவகையாய்நிற்கும்பசுக்கடம்பதியேபோற்றி
மலவிருளொழிக்கும்ஞானவானசூரியனேபோற்றி. (௩க)

பரமகலியாணரூபபரமவாத்துமனேபோற்றி
திரமெனுநன்மையாயசிவபெருமானேபோற்றி
கரமலையுரித்தமுக்கட்கடவுளேபோற்றிகங்கா
தரதிரிபுரசங்கராசங்காரபோற்றிபோற்றி. (௩உ)

என்றுமெய்மறந்தன்பொடுமிருகண்ணுலருவிசோர
நின்றிருகரங்கள்கூப்பிநிலமிசைவிழுந்துநாயேன்
கொன்றரூத்திரனல்மேவுங்கொலையெனையணுகாவண்ணம்
வென்றிகொள்மழுவாளேந்தும்விமலனேகாத்தியென்ன. (௩௩)

உரைத்தலுமகிட்சியோடுமுமையொருபாகன்மேரு
வரைத்தடச்சிலைக்கையேந்துமழுவலான்வெளிவந்தெய்தித்
தரைக்குள்மாதவங்கள்செய்தரூத்திரத்தவனைநீசங்
கரித்திடுதோடமெல்லாங்களைந்ததாகுத்தவென்றே. (௩ச)

நித்தியசுத்தரூபநீயுமானிடவர்போலே
யித்தலந்தன்னிலுள்ளகிருத்தியமியற்றலாகி
யுத்தமவிருப்பதானுயுலகினுக்குயிருநீயே
சித்திசேர்கருத்தவேங்தெச்செகமுமுன்வசமதாமால். (௩ரு)

என்றிறையவனுங்கூறவிராமனுமிறைஞ்சிரயத்திப்
பின்றிகழ்சடையானுயேன்பேர்ப்படுதீர்த்தந்தன்னி

லொன்றியகருத்தாலாடியும்பர்மாதவர்பிதிர்க்கள்
நன்றுறத்தருப்பணித்தேனிவண்பூசித்தேத்தும் (௩௬)

உம்மையுந்தெரிசித்தோர்க்குமனோரதமுதலாயுள்ள
செம்மைகள்பெறுவதாகத்திருவருள்புரியவேண்டும்
வெம்மைகொள்கொடியபாவமேவினரேனும்போந்தால்
மும்மலங்களைந்துசுத்தமுத்தராயிருக்கவேண்டும் (௩௭)

என்னுடைப்பேரதாமிராமனீச்சுரமதென்றே
பொன்னிலமுதலாயுள்ளோர்புகன்றிடவேண்டுமியாரு
முன்னருந்தலத்தின்பாங்காயோசனைதூரஞ்சுற்றி
மின்னவிர்சடையாயாசான்சேத்திரந்தனிலுமிக்காய். (௩௮)

இருக்குநற்றலமதாகவின்னருள்புரிவாயென்றே
யுருக்குநன்மொழிகளோடுமுறைத்தலுங்கருணைகூர்ந்து
மருக்கமழ்கடுக்கையோனவ்வரங்களுமுதவப்பெற்றே
திருக்கயிலாயமென்னச்சினகரமியற்றினனே. (௩௯)

ஆலயம்பிரகாரங்களமைத்தரன்விடையும்பெற்றே
காலமூன்றுணர்ந்தஞானக்கடமுனிவனையுங்கண்டு
சீலநீர்க்கடனைசூழ்ந்தசிவசயிலத்திற்போந்தே
ஏலவார்குழலிபங்கனிணையடியிறைஞ்சியேத்தி. (௪௰)

தயிலநெய்தயிர்பால்செந்தேன்சந்தனவகையாற்றிங்கள்
வெயிறவழ்சடையினானைவிதிமுறையாட்டிச்செய்ய
கயல்விழியுமைபரமகலியாணியோடும்வாசம்
பயின்மலர்வகையால்முக்கட்பரமனைப்பூசைசெய்தே. (௪௧)

அருப்பெருங்கடலைமுக்கணமுதினையடியரென்றும்
விரும்புறுகனியைஞானவிளக்கினைவிளங்குகண்டத்
திருட்பொலிகுழகன்றன்னையெழிற்சிவசயிலமென்னும்
பொருப்பனைவாய்நாரத்துதிபலபுகலலுற்றான். (௪௨)

(வேறு)

மூன்றுமலமூன்றுகுணமூன்றுகுற்றமூன்றவத்தைமுதலதாக,
வேன்றுவருமிருவினையுமிந்திரியம்பத்தினுடனிடமாய்க்காட்டி,

தோன்றிடவெவ்வுலகினுக்குந் தொழினடத்தும்வல்லபமாய்ச்சுடரேசெய்யத், தேன்றிகழுமிதழியணிசெஞ்சடையோய்சிவசயிலச்சிவனேபோற்றி. (சஙு)

மாலாகியயனரனுமயேசுரன்சதாசிவமெய்வடிவமாகி, மேலாயச்சத்திசிவம்விந்துவாய்நாதமுமாய்வெளியதாயப், பாலாகியண்டரண்டப்பரப்பாகிச்சிவசயிலபதியாயும்மைப், போலாதியந்தமில்லாப்பொருளுளவோபோற்றிசயபோற்றியென்றே. (சச)

பலவகையாற்றோத்திரங்கண்மொழிந்துதிருவருள்போற்றிப்பரிவினோடு, நிலவரைமேல்விழுந்தெழுந்துநெடுநேரம்பரவசமாய்நின்றுகைகள், தலையின்மிசைகுவித்திருகண்டாரையொழுகிடக்காதறணவாதாகிச், சிலைவலவனுனமனுகுலராமன்விடைவாங்கித்திரும்பிச்சென்றே. (சரு)

மானகரயோத்திதனில்வந்தடைந்தானென்றுமுனிவரற்குத்தொன்மை, ஞானமுனிவரனுசூதமுனிவரனிசைத்துவன்னிநாத, ரானசிவலிங்கவரலாறுமக்குப்புகலுதுமென்றருளினோடுந், த், தேனலர்பொற்கடுக்கையணிசிவபெருமான்கதையெடுத்துச்செப்பலுற்றான். (சசு)

முன்னமொருகாலமதிலக்கினியுஞ்சத்தமுனிவரர்களில்வாழ், கன்னியர்கள்மீதில்மிகுகாதல்கொடிதாய்மயங்குங்கருத்தனுனு, னன்னிலைமைதனைமுனிவரறிந்துதந்தவப்பெலத்தாலழுகுகுன்றித்தன்னிலைமையாகியபேரொளிமழுங்கிப்போவதெனச்சபித்திட்டார்கள். (சஎ)

அன்னிலையிலக்கினியுமழகுகுன்றியொளிமழுங்கியரியசாப, மென்னிலையிற்றீருமெனக்கொடியவருந்துயருழன்றங்கிருக்குங்காலை, தன்னறிவாற்பூவுலகிற்றவம்புரிந்திச்சாபமொழித்திடுவதென்றே, புன்னியவன்மனதிலுணர்ந்தும்பரைவிட்டிம்பரில்வந்துறுவதானான். (சஅ)

ஆதிசிவசயிலத்தின்பூருவத்திலணித்தாகவடைந்தேயன்னேன், மாதவஞ்செய்திருந்ததன்பேர்விளங்கவன்னிதீர்த்தமொன்றுவகுத்துச்செய்தே, சிதவரநதியினுக்குக்குணக்காகவரியதவ

ச்சேத்திரமிந்தப், பூதலத்தில்வன்னீசரென்றுசிவப்ரதிட்டைப ண்ணிப்பூசைசெய்தான். (சகூ)

செய்தவருந்தீர்த்தமதிற்றினந்தோறுந்திரிகாலமூழ்கிநாகப், பைதவழுஞ்சடையானைப்பானிறவெள்விடையானைப் பரவைவந்த, மைதவழுங்களத்திறையைவன்னீசரானமுக்கண்மலையைப்பூசித், தெய்தியவர்சாபமொழிந்தெழிறுலங்கவொளிவிளங்கியிருப்பதா னுன். (ருய)

அண்ணல்வன்னியப்பரினிதமர்ந்திருக்குந்தலமகிமையிறிந்து கூற, வெண்ணுவதோவத்தலத்திறுற்றிசையிலியோசனைதூரங் களெல்லாம், புண்ணியசேத்திரமாயும்பாதகத்தைப்போக்கிவை க்கும் பூமியாயும், விண்ணவருக்கிருப்பாயுமிருப்பதெனச்சூதமு னிவிளம்பலுற்றுன். (ருக)

அருந்தவமாமுனிவரரேதசரதராமீசர்வரலாறுங்கீழபா, லிருந்தவன்னிவீசர்வறலாறுமுமக்கெடுத்திசைத்தோமின்னமாங்கே, விரிந்தசடைப்பாவவினுசச்சுயம்பின் வறலாறும்விளம்பியாண்டு, பொருந்துபஞ்சக்குரோசமத்தியிருப்பவர்கடவப்பேறும்புகல்வோ மென்றுன். (ருஉ)

10-வது ரெகுனயகர்பூசித்தசருக்கம்முற்றும்.

---

ஆகதிருவிருத்தம் ருாஅயரு.

# பதினொருவது
# அகத்தியர் பூசித்தசருக்கம்.

கொச்சகக்கலிப்பா.

அரியதவமாமுனிவரளவில்பெருமகிட்சியராய்ப்
பரிவுடையராய்மனதுபரவசராய்ப்பொதியவெற்பி
னரியதொருபாவவிஞசச்சுயம்பின்வரலாறுந்
தெரியவருள்புரிதியெனச்சூதனுரைசெய்தனனால். (௧)

மிக்ககயிலாயவெற்பின்மேனாட்சங்கரராயுந்
திக்குடையராயுஞ்செகதீசராகியுமே
யக்கரவாபரணருமாயருளிடபத்துசரான
செக்கர்நிறச்சடைமவுலிச்சிவபெருமான்றிருவுளத்தில். (௨)

இமையகிரிதனிலடைந்தேயிமவான்பெற்றினிதெடுத்த
வுமையவளைவதுவைசெயவுவந்துதிருமணம்வேட்ட
சமையமுணர்ந்துலகிலுளோர்தாபரசங்கமமுதலா
மமைவிலாவுயிர்களெலாமாங்குதெரிசனைக்கடைந்தார். (௩)

இன்பூரவுலகமெலாமிமையகிரிதனின்மேவத்
தென்பூமிமிகவுயர்ந்துதீயகுறும்பாயதனை
மின்போலுஞ்சடைமவுலிவிமலருணர்ந்திதனைமிக
வென்பான்மையாற்சமமாமென்றுதிருவுளநினைந்தே. (௪)

கும்பமுனிவரையழைத்துக்குழந்தாய்தெக்கணபூமி
யம்புவியின்மிகவுயர்ந்ததாகையினாலாண்டுசென்றே
வம்பமுன்போற்சமமாகும்படிவிரைந்தேகுதியெனவு
நம்பர்திருவாய்மலர்ந்துநம்முரைமறுதியென. (௫)

நாமவணெய்திடவேண்டுநம்மையல்லால்நீருமவண்
போமளவிற்சமமாமப்பூமியெனப்புகன்றிடலு
மேமுறுசிந்தையுமாகியிறைவர்திருவாக்கினையைத்
தாமதமுஞ்செயக்கூடாதெனமுனியுமனந்தளர்ந்தார். (௬)

ஏவியநற்பணிவிடையிலெய்துவதோவென்செய்கேன்
றேவிதிருமணம்புரியுஞ்சேவைசெய்வதோமகிழ்வாய்

மூவுலகுந்தொழுதேத்தமுற்றவத்திற்பெற்றபெரும்
பாவியுநானென்மனதுபலவாகியலம்வருமால். (எ)

(வேறு)

கலிவிருத்தம்.

கண்ணுலுமையாள்கலியாணமதை
நண்ணுதொழிகநலமாதவமும்
பண்ணுதவனோவெனவும்பலவா
யெண்ணுதனவெண்ணினர்மாதவரே. (அ)

இமையாசலமேவியுமேவிறைவ
ருமையாள்மணமேவியகோலமொடு
மமையாவடிவாகியசேவைகொடுத்
தெமையாள்கருணையிலராயினரே. (௯)

திருமாலயன்மாதவர்தேவரொடு
மிருமாநிலமேவியயாவர்களும்
வருமாலதிலோர்வகைநானலனோ
பெருமானருளும்பெறுமன்பிலனே. (௰)

அந்தோவுயிராம்வகையாவைகளும்
வந்தேதெரிசித்திடயிவ்வயின்விட்
டெந்தாய்பிரிவாகுவதோவெனவுஞ்
சிந்தாகுலமுஞ்செறிவாயினரே. (௰௧)

அருவாயுருவாயளவில்லதுவா
மொருமாமுதலோனுமையாள்வதுவைத்
திருமாமணமேவியசேவைதரும்
பெருவாழ்வினிநான்பெறுநாளுளவோ.

மகிழ்வாயுயிர்யாவைகளும்வதுவை
மிகுகாதலொடுவிளைவாகவுமியான்
புகலாகுவதோபெரிதியம்புனிதா
தகுமோவவமோதமியேன்றவமே. (௰௩)

அருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(வேறு)

நன்மைதருதிருமணக்கோலத்தைக்கண்ணுஞ்சேவைசெ
ய்திடநற்றவங்கள்செய்த, தின்மையோவந்தோவிங்கிருந்தோமா

கிலிறைவர்திருவுளங்கொளாதீண்டுநீங்கித், தென்மலையந்தனிற் சென்றால்மணக்கோலத்தின்றெரிசனையுங் கிட்டாதென்செய்வோமென்று, தொன்மைமறைமுனிமன துகவற்சிகொண்டுசூழ்ச்சியுடன்றெழாய்நடைபோற்சுழல்வதானார். (மச)

இந்தவகைகுறுமுனிவர்வருத்தமெல்லாமிறைவர்திருவுளத்தறிந்தேவினிமையாக, வந்தமுனிவரர்தனையேகருணைகூர்ந்துவருகதனிலழைத்தவருக்கருளிச்செய்யும், விந்தைபயில்பொதியவரைதன்னினுமுமேடசங்கிருந்திதனில்விடையின்மீதுன், சிந்தைமகிழ்ந்திடவுமையாளுடனே செய்யுந்திருமணக்கோலமுங்காணச்செய்வோமென்றார். (மரு)

தெக்கணவாருதிக்கரையிற்பெருமையான திரிகூடப்பருப்பதமொன்றுண்டுகிழ்பான், மிக்கபுனற்கடனையுலகுயிர்கட்கெல்லாம் விரவியபாதகங்கடனைவிட்டலாகு, மக்கடனைத்தென்கரையிலணியாயுள்ளவனுதிசிவசயிலரெனவலரோன்பூசித், தெக்குவலையமும் பணியவசித்துநாமங்கிருப்பதுவெக்காலமுமென்றெடுத்துக்கூறி.

அத்தலத்திற்போய்நமையுமருச்சித்தேதத்தியத்திரிமாமுனிவிருத்தராகவாங்கே, சித்திதருதிரிகூடவெற்பின்மேவித்தினமும்வசித்திருப்பவவர்சிந்தைகூறப், பத்திபண்ணியவணீங்கித்தென்பால்மேவிப்பருப்பதசிரேட்டமுமாய்ப்பழமையான, வுத்தமமாந்தென்கயிலைமலையமாமங்குற்றுநெடுங்காலம்வசித்துறைவீரென்றும்.

கங்கையுநீர்கொடுபோயம்மலையவெற்பிற்காசினியெலாமகிழத்தாம்பிரபன்னி, மங்கையென்னும்பேருடைத்தாயுமதுபாங்காவரநதியைப்பிறவாகஞ்செய்வீரந்தப், பொங்குபுனற்றாம்பிரபன்னிமேற்கதாயும்பொதியவெற்புக்குத்தரமாய்ப்புனிதமாகி, லிங்கவடிவானசதாசிவமாய்ப்பாவவினாசரெனமூர்த்திகரித்திருப்போமென்றும். (மஅ)

உம்முடையமனவிருப்பப்பொருட்டாணுமங்குரைந்துவசித்தினிதிருப்போமுவப்பினோடும், நம்மைவிதிமுறையாலன்னதியிலொடிநாடோறும்பூசனைசெய்திடுவீரென்று, மம்மலையிற்றிருமணக்கோலத்தின்காட்சிபளிப்பதனுக்கையமில்லையாகைபாலே, செம்மைதருமனமகிழ்வாய்பெய்திநீருஞ் செல்வீரென்றனுக்கிரகஞ் செய்வதானார். (மகூ)

அண்ணறிருவாக்கினையின் றிறத்தைக்கேட்டுவகத்தியருஞ்சிரசில்வகித்தன்பினோடும், புண்ணியநற்கங்கையுமங்கெடுத்துக்கொண்டுபோந்தனர்தென்புலனோக்கிப்போதுங்காலை, கண்ணகன்ஞாலத்திலுள்ளதலங்கடீர்த்தங்கடவுடெரிசனைகள்செய்துகடனைத்தென்பால், விண்ணையடர்திரிகூடவரையின்கீழ்பான்விளங்குதிருச்சயிலமதில்விரைவிற்சேர்ந்தார். (உ௧)

விமலர்திருச்சன்னதியிலடைந்தேசென்னிமேற்குவித்தகரத்தினராய்மேனியெங்கும், கமலனெடுநாளமுகிலெனவுரோமங்கண்டகங்களாய்ச்சிலிர்த்துக்காட்டக்கம்பித்,தமலர்திருமேனியினைநோக்கிநோக்கியருவியிருவிழிகளிலுமலைப்பவாங்கு, தமையுமறந்தவனிமிசைபரிவாற்சம்போசயிலபதிசயிலபதியென்றுதாழ்ந்தார்.

இன்னமுறைபால்வணங்கியெழுந்துபின்றேயிறைவர்தமைப்பூசனைசெய்திடுவதாக, நன்னதியாங்கடனைதனில்விதியாலாடிஞானமுனிவரர்மனதுநயப்பினோடு, முன்னர்விநாயகபூசைமுடித்துமுக்கண்முதல்வர்சயிலேசரையுமுறைமையாகத், தன்னுணர்வாற்பூசனைகள்புரிந்துபோற்றித் தண்டீசர்பூசையுஞ்செய்திடுவதாகி. (உஉ)

அக்காலையரியதவமுனிவரானவத்திரிமாமுனிவராச்சிரமநோக்கி, மிக்கானகுறுமுனிவர்சென்றுகண்டுவீழ்ந்துபன்முறைவணங்கிவியப்பதானார், தக்கோர்களிருபேருமளவளாவித்தமிழ்முனிவரோடுபெருப்பதத்தின்வீறு, மெக்காலுந்தான்வசித்தங்கிருப்பதானவியல்பையுமத்திரிமுனிவரிசைப்பதானார். (உ௩)

அதியதவக்குறுமுனிவர்கேட்டேதாமுமமலர்திருவாக்கினையாலாண்டுநீங்கிப், பொதியவரைக்குறும்வாறும்புகன்றாரந்தப்புண்ணியமாமுனிவரதிசயித்துப்பொய்தீர், மதிவலவஞானமுனிவரநீர்காணமலையவெற்பிற்றிருமணக்கோலத்தின்காட்சி, நதிமுடித்தவேணியர்தந்தருள்வாரிந்தஞாலமுமும்மாலடையுநன்மையென்றே. (உ௪)

விருத்தராமத்திரிமாமுனிவர்கூறமெய்த்தமிழ்மாமுனிவரவர்விடையும்பெற்றே, திருத்தமிகுமலையவெற்பிலடைந்தாரந்தத்தென்பூமிபவர்மகிமைச்செயலினாலே, பொருத்தசமனாகியதாமுனிவர்கொண்டுபோந்தகங்கைதாம்பிரபன்னிபொருநையென்னக்,

கருத்தினுடன் விடுத்திமவான் புதல்வியான கன்னி திருமணக்கோல
ங்காண்பதாக. (உரு)

ஆங்குவசித்திருந்தன ரன்ன தியின் மேல்பாலகிலபுவனே சரு
முக்களாவினீழற், பாங்குதருஞ்சுயம்புலிங்கவுருவங்காட்டிப்பா
வவினாசச்சிவனுற்பவித்தார்ஞான, மோங்குதமிழ்க்குறுமுனிவர்
கண்டேவின்பமுலவா தபெருங்காதலுடனேபோந்து, தீங்ககற்று
ந்தாம்பிரபன்னிதன்னிலேதாஞ்செய்விதிமந்திரமுறையாற்றீர்த்த
மாடி. (உசு)

சன்னதியிற்போந்துசந்தனுதியிட்டதயிலநெய்பாறயிர்நறை
ச்சந்தனத்தின்சேற்றால், முன்னவருக்கபிடேகம்விதிபாலாட்டி
முருக்கமழாவலர்மலரானலரிச்சித்தேத்தி, வின்னமிழ்தவகைகளி
ஞனைவேதித்தேயிறைவர்திருவடிக்கமலமிறைஞ்சியன்பு, துன்
னுபெருங்காதலுடன்வாய்களாரத்தோத்திரஞ்சாத்திரமுறையிற்
றுதிப்பதானான். (உஎ)

(வேறு)

ஆருதாரப்பொருளாயளவிறந்ததுவாதசாந்தத்தின்மேவும்,
வீருனபேரொளியாய்வெளியாகியானந்தவிளைவுமாகிக், கூறுர்ந்
தவருளுருவாயுயிர்களுக்குப்பரகதியைக்கொடுப்பதாக, வேறுர்ந்
தகொடியுயர்த்திருந்தபரம்பொருளேவுன்னிணைத்தாள்போற்றி

ஆரணத்தின்முடிவொளியாய்க்கண்டிதமாயகண்டிதமாயக
ண்டஞான, பூரணமாய்த்தனிமுதலாய்ச்சத்திநிபாதத்தருக்குப்
பொருளாய்மூல, காரணரய்க்கண்மணியாயம்மணியிலுள்ளொ
ளியாய்க்கருணைவெற்பாய்ச், சீரிணங்குமலையவெற்பிற்பாவவினா
சப்பரமசிவனேபோற்றி. (உகூ)

என்றுபலதோத்திரங்கள்செய்துநிதம்பூசனைசெய்திருந்தகா
லை, வென்றிமழுவாட்கரத்தெம்பெருமானுர்சித்திரைநல்விசுவில்
வெள்ளிக், குன்றனையவிடையிலுமையவள்கூடத்திருமணக்கோ
லத்தைக்காட்டி, நின்றனர்மாமுனிவர்மனம்வியந்துதெரிசனைகள்
செய்தார்நெடிதுகாலம். (ஙய)

ஆகையினுற்பாவவினாசச்சுயம்பின்வறலாறிப்படியாமாங்கே,
போகமுத்தியுயிர்களுக்கும்பொருந்தவருள் புரிந்திருந்தார்பொரு

வில்கேழ்வி, யாகமமாமுனிவரரேயத்தலத்தின்பெருமையெவர
றியவல்லார், சேகறுதென்சிவசயிலத்தலத்தினுண்மையொருமா
ற்றஞ்செப்பக்கேண்மின். (௯க)

கொச்சகக்கலிப்பா.

பாதலம்பூதலத்திலுள்ளபரமசிவன்சேத்திரத்தி
னோதரியசிவசயிலமுத்தமமாமத்தலமும்
பூதகாரணமாகும்புனிதர்சிவசயிலர்தமை
வேதனுமத்திரிமுனியும்விருப்புறுபூசையினாலும். (௯உ)

குடதிசையின்முகமாயக்குழகரிருப்பதனாலுஞ்
சடைவிளங்குஞ்சுயம்புசிவசயிலபதியுத்தமமாம்
வடகயிலைநிகராகமறைபுகலுமத்தலத்தைப்
புடவியிலோர்தலத்தைநிகர்புகன்றிடுவோர்பாதகத்தை. (௯௯)

சித்திரகுப்தருந்தொகையிற்றெரிப்பரிதுசிவசயில
மெய்த்தலத்தில்வசித்திருப்போர்மேவியபுண்ணியங்கடனை
யித்தனையென்றெவர்களெடுரிந்தெழுதவசத்தருமாவர்
நித்தியமாமுனிவரரேநிகரதற்குப்புகலரிதே. (௯ச)

கயிலைநிகர்தலங்கடனைக்கழறலாங்கடவுள்சிவ
சயிலநிகரென்னவொருதலத்தையெடுத்தியம்பிடுவோர்
வெயினிலவுள்ளளவுநமன்வேதனையானரகுறுவர்
செயலரியதவமுனிவீர்சிவனாணைசத்தியமே. (௯ரு)

என்றுதவச்சூதமுனியிருகைசிரமேலெடுத்தே
பொன்றியசிந்தனையாலீதுண்மையுண்மையுண்மையென
வின்றவர்சூழ்பேரவையிலெழுந்தகுரலுடன்புகன்றுன்
மின்றிகழ்பூஞ்சடைமுனிவர்வியந்துபரவசமடைந்தார். (௯சு)

கூறவரிதாய்ப்பஞ்சக்குரோசமத்திதனிலுரைவோர்
பேறுதெரிந்துரைப்பதெவாபிரமனுடன்மாலயனிவ்
வாறெனலாய்த்தெரிந்துரைக்கமாட்டார்மானிடவரல்ல
வாறணிந்தசயிலபதியவர்களௌனுச்சொலப்படுமே. (௯எ)

பூவுலகுதனில்விளங்கும்பொருவில்சிவசயிலநிகர்
மூவுலகுதனிலுமிலைமுனிவரரேசயிலேசர்க்

காவுடையார்சோதனைசெய்தட்டபந்தனம்புரிவோர்
மேவுவர்வங்கிடத்திறனுடுவிமலர்திருவடிநீழல். (௩அ)

விண்ணவர்மாலயன்முதலோர்விருப்பினொடுநிதம்பணியுங்
கண்ணுதலார்சிவசயிலக்கடவுள் திருவாலயத்தி
லுண்ணெகிழ்வாய்ச்சீறணவுத்தாரணஞ்செய்திருக்குமந்தப்
புண்ணியர்கள்கிளைகளொடும்பொருந்துவதுசிவலோகம். (௩௯)

கோமானூர்சிவசயிலக்குழகருக்குப்பூசனைக
டாமாண்பியாயிருந்துதணவாதுநடத்துவர்பாற்
பூமாதும்வசித்திருப்பள்புத்திரசம்பத்துடனே
சீமானெனவிருந்துசிவகதிபெற்றிடுவர்திண்ணம். (௪௰)

அலகிறவச்சிவசயிலத்தமலர்கதைகளைவிருப்பா
லுலகினிற்கேட்டிடுவோர்களுமைபரமகலியாணி
தலைவரருளாற்சகலசவுக்கியம்பெற்றந்தியத்திற்
குலவியவர்கயிலைவெற்பேகுடியாகவிருப்பதுவே. (௪௧)

இக்கதையையேடுதனிலெழுதியனுதினமுமன்பான்
மிக்குடன்பூசித்திடுவோர்மேதினியினெடுங்கால
மக்களுடன்சந்ததியும்வங்கிசமும்வளர்ந்தேறித்
தக்கபெறும்புகழ்படைத்துச்சயிலபதிபதம்பெறுவார். (௪௨)

பறுவகாலத்திலிதைப்படித்தவர்க்குமுன்றுலகு
முறுவதுகைவசமாமீதுண்மையுண்மையாகுமல்லாற்
சறுவசெகதீசர்சிவசயிலேசர்திருவருளாற்
பெறுவதுவும்பரகதியாம்பேசுவதற்கெளிதாமோ. (௪௩)

யோக்கியமாயிக்கதையையுரைப்பவருமுரைசிறந்த
வாக்கியத்தைக்கேட்டுமனமகிழ்வோருமலமாயை
நீக்கியிந்தவையகத்தினெடுங்காலம்பொருந்தியந்தப்
பாக்கியவான்களும்பெறுவர்பரமபதங்காணியதாய். (௪௪)

இக்கதையைப்பலகாலுமிசைப்போருங்கேட்போருஞ்
செக்கர்நிறச்சடைமவுலிச்சிவசயிலபதிக்குநிக
ரொக்குமெனச்சகலவுயிர்களுமவர்பதத்தினரா
யக்கணிவேணியர்கருணைக்கவருடையராயிருப்பார். (௪௫)

அவனிதனிற்சிவசயிலத்தருமைதனைவர்ணனையாய்ச்
சிவனுரைக்கவேண்டுமெதுசிவசாயுச்சியபலத்தைத்

நவமிருந்தவுலகுயிர்க்குநல்குவதாலென்றரிய
தவமகிமைச்சூதனருந்தவமுனிவர்க்கெடுத்துரைத்தான். (சகூ)

மன்னுமருந்தவச்சூதன்பெறலருமன்பூர்க்குமெம
தன்னைகலியாணியுமையவடனக்குஞ்சிவசயில
முன்னவர்க்குமத்தலத்தின்முழங்குகடனாதிக்கு
மென்னுடையநமக்காரமென்றுபணிந்தெழுந்திருந்தே. (சஎ)

மெய்க்குருவாகியசீமான்வியாசமுனிதிருவாக்கா
லிக்கதையையெமக்கருளயானுமுமக்கெடுத்திசைத்தே
னக்கதையாந்தேன்செவிகளாகியபாத்திரத்தேந்தி
யொக்கவருந்துவர்சிவசாயுச்சியம்பெற்றிடுவருண்மை. (சஅ)

அத்தலத்தின்மகத்துவமாமரியகதைதனையினிதாய்ப்
பொத்தகத்திலெழுதிவைத்துப்போற்றுவரும்புகழ்வோரும்
சித்தமுறக்கேட்போருஞ்சிந்தனைசெய்திடுவோரும்
நித்தியராயிருப்பரிதுநிச்சயநிச்சயந்தானே. (சகூ)

தேசிகமாமுனிவரரேசிவசயிலமகிமைகளைப்
பேசுகதைபதினொன்றும்பிரமாண்டபுராணத்தில்
மாசில்சிவரகசியகண்டத்தில்வகுத்துரைத்ததென
வீசுபுகட்சூதமுனிவிளம்பமுனிவரர்வியந்தே. (ருய)

இருந்தவராஞ்சவுனகராதியர்முதலோரெழுந்திருந்தே
யருந்தவச்சூதனுக்காசமனம்பாத்யமருக்கியமும்
பொருந்தவளித்துவப்பினொடும்பூசனைசெய்தடிபணிந்து
விரிந்தகுரனுடனுசிவிளம்பியுபசரித்தார்கள். (ருக)

சிவசயிலபதியருமைத்திருமேனிதனைத்தீண்டுந்
தவமறையோர்வாழிபரிசனர்வாழிதமிழ்வாழி
பவமகலவிறைவர்திருப்பணிசெய்யடியவர்வாழி
யவனிநனிற்சிறந்திருக்குமன்பூரும்வாழியதே. (ருஉ)

திருச்சிற்றம்பலம்

11-வது அகத்தியர்பூசித்தசருக்கம்முற்றும்.

ஆகத்திருவிருத்தம் கூளகூயரு.

ஸ்ரீ சிவசயிலத்தலப்புராணம் முற்றிற்று.

சிவசயிலபதிஸஹாயம்.





சிவமயம்

# ஸ்ரீசிவசயிலநாதர் துதிக்கலிவெண்பா.

சீரார்சிவசயிலச்சிற்பரனேபோற்றியமை,
காரார்குழற்பரமகல்யாணி பேரா
யிடப்பாகத்தாய்போற்றியேத்தத்திரிபூசி
நடப்பாதாபோற்றிகடனா ணிடப்பாகோ
ரக்கர்கணிற்கண்டவாபோற்றிமேலவா
யிற்கோயில்கொண்டசிவனேபோற்றி யக்கார
சம்போசிவசங்கராசந்திரமௌலி
யம்பாலகோவான்கங்காதரா செம்பொன்
பவளநீலப்பாற்படிவாநமனார்
துவளத்துவைத்ததுணைப்பா தவளங்கள்
போற்றிவன்னியப்பருக்குத்தென்புரமாய்ப்போங்கடனை
யாற்றினிடச்சுந்தரேசாபோற்றி போற்றிபுண்யா
போற்றிஹராபோற்றிவராபோற்றிமகாதேவபரா
போற்றிமுனிவோர்போற்றும்பொற்புமிகுந் தேற்றமுறு
மத்திரிப்பேராமுனிவனான்மவிசாரம்பண்ணி
மெத்தநெடுநாள்வரையில்மேவிடுநாட் சித்தந்
தனிலேயோர்சஞ்சலமுமஞ்சனமுந்தான்றோன்றி
நணிபயன்கணற்றவமேநல்கு மெனநாடி
நீணாட்கழித்ததலானின்மலன்சிவர்க்கருள்வான்
கோணாட்சுயம்புலிங்கங்கொள்குறியைப் பேணா
திருந்தேனெனக்கவல்வானின்புறவென்னன்ப
வருந்தேலனாதிசிவமாமலையி விருந்தே
சிவசயிலநாதரெனச்சீர்ச்சுயம்புலிங்கத்
தவமகவமூர்த்திகரமானேங் கவல்விடென
வாகாயவாக்காலரைந்தவருள்போற்றி
வாகாயவர்க்கருளுவான்வேண்டி யோகாய
கோரட்சகற்குமுனங்காட்டுகுறியேபோற்றி
தீரத்தவனுரைக்கச்சிந்தைமகிழ் கூரத்ரி

வந்துகண்டானந்தசுகவாருதியில்மூழ்கியன்பாற்
சிந்துகணீரானனேந்துசிந்தையுன்பால் வந்ததனால்
மால்விடைமேற்காக்ஷிதந்தவானவாபோற்றியவன்
மேல்விளம்புமெய்த்துதியின்மேன்மகிழ்ந்து சால்புறவே
வேண்டுவரமீய்ந்தருளால்மெய்யாய்வாலீச்சிரமும்
சேண்டொடுகொச்சீர்ப்பிரமதேயமும்நாம் வேண்டுமிந்த
நீகண்டவித்தலமுநேயகயிலாயமெமக்
கேகண்டாயென்றருளெந்தாய்போற்றி சேகண்டா
ஓர்கற்பத்தாதிதனிலோங்குலகெலாம்படைக்கப்
பேர்கொண்டவேதனெணம்பேதித்துச் சீர்கொண்ட
தன்றொழிலெலாமறந்துதானசத்தனுயிருக்க
நன்றோரறிவுவந்துநாம்படைத்த லொன்றுஞ்
சிவனருளினாலன்றோசெய்தோமிதுவா
யவன்செயலானனம்மாலாவதெனென் றுவன்றுயர்கண்
டஞ்சேல்வருந்தேலனுதிசிவசயிலந்
தஞ்சேகுணதிசையிற்சார்ந்துநீ யெஞ்சாத்
தவம்புரிதியாமங்கிலிங்கமதாய்ச்சார்ந்துற்
குவந்ததொழில்செய்வகைகளோடுரைப்போம் நிவந்திலகு
மத்தலத்திற்கேகென்றவண்ணலேபோற்றியவன்
பத்தியொடுசென்றுதவம்பண்ணமகிழ் சித்தமுடன்
சேர்சுயம்புலிங்கத்திற்றிவ்யதெரிசனந்தந்
தார்வவரந்தந்தவரனேபோற்றிச் சார்வாம்
பரமபராசத்தியுடன்பார்முனிவர்தேவர்
பிரமனரிமற்றெவரும்பெட்பால் வரமுதவென்
றேத்தக்கொலுவிலிருக்கப்பிருங்கிருடி
தோத்திரித்துனைச்சூழத்தோகையினந் தாத்தியனே
யென்னவலஞ்செய்கிலனெத்தாலென்னப்புன்னகைகொண்
டுன்னையென்னையுள்ளபடியோர்ந்தவர்கட் குன்னாற்
பலன்பெறுவதில்லையெனப்பாரவிளையாட்டாற்சொன்
மலர்ந்தகருணைமுகவாபோற்றி கலந்தவளோ
ரெப்புவனமும்முருவாயெய்ந்தவளாமென்பதனை
லப்பிருங்கிமேற்குருதியாதிதங்கூர் செப்பெவையும்
வாங்கவசத்தனய்நிற்கமகாதேவி
நீங்கியேமேற்றிசையினேர்செல்லப் பூங்கொடியே

தெள்ளமுதேநற்குணியேசெஞ்சொல்பரியாச
முள்ளெள்ளென் றுநன்மொழிகளோடுவக்கத் தெள்ளக்
கலியாணியிங்கேவாவென் றுமேற்காய்ப்பார்த்
தொலியாலழைத்தவுரவோய்போற்றி சலியா
மனத்தளாய்வாமபாகம்பெறுமாறுன்னி
யினித்ததவஞ்செய்கின்றுளென் றுண் ணிணைத்திலர்போற்
சித்தவிகாரத்தரெனத்தெய்வகங்கையாதியரை
அத்திரியினில்லாளனசூயைப் பத்தினியைக்
கூவிப்பிரிவாற்றுக்கொள்கைபலகூறியவள்
வாவலெலாமீய்ந்திடுவோம்வாவென்றே மேவிடநீர்
சொல்வசொலிக்கூட்டிவந்தென்சோகமெலாந்தீருமெனச்
செல்வதுரைசெல்வதுரைச்சீர்போற்றி வல்வலியர்
சென்றழைப்பவன்பர்திருமேனியிற்பாக
நன்றுதருநாள்காறுநற்றவமே யொன்று
மெனக்கென்றிசைத்தத்திரியின்சொல்கேதாரர்
மனக்கொள்விரதத்தின்வசமாய்த் தனித்திருக்க
நீகருணையால்விடைமேனேர்வந்துகாசுிதந்தி
யோகவுலகின்றகலியாணியுந்தன் ருகமிக
வாகுந்தவவிரதமன்பாமெனச்சொலிடப்
பாகமளித்தபகவாபோற்றி மாகர்புகழ்
பாண்டிமணலூர்ப்பதியாஞ்சுதெரிசனன்
வேண்டுமகவின்விருப்பதனுற் பூண்ட
பரிமேதஞ்செய்யப்பகரச்சமதக்னி
அரிதுமுடிதலெனவயர்போழ் திரியா
தியற்றென்றுவானிலிசைலீலையாய்போற்றி
நயத்தவனுஞ்செய்யவிட்டநற்பரியுஞ் செயித்துலகைச்
சுற்றிவரமேற்றிசையிற்சூராரியைநீபோய்ப்
பற்றிவிடாவென்றபரனேபோற்றி மற்றவனும்
ஒர்வேதியச்சிறுவனுகியொருமரத்திற்
பேருமாக்கட்டப்பெருஞ்சண்டை நேர்வாய்
அரசிளையோன்வீழவங்கமெலாமாயப்
பரசரசன்கேட்டுவந்துபார்த்து முரசறைந்து
போர்செய்துவேலாற்பொருதானைகள்மாயத்
தார்வேந்தனுமயங்கிச்சாய்ந்துளத்தில் ஏர்வாய்ந்த

கின்னைமறவாநிலைகண்டெதிர்வந்த
அன்னையேஅத்தாவண்ணுபோற்றி மன்னவனை
யுன்பத்திசோதித்தோமுன்பத்தியேபெரிதுன்
னன்புக்குவந்தோமமர்க்களத்திற் றுன்புற்று
மாண்டவரெல்லாமுய்வர்மற்றுனதுதம்பியொடு
பூண்டபுரவியொடும்போய்மகத்தை வேண்டியவா
செய்திகுமரன்றனைநின்சேயாய்ப்பிறக்கவரு
ளுப்திறத்தாற்செய்வோமென்றோதலுடன் வைதிறத்துச்
சூலமுழுவுந்தந்துசோராவரங்களுந்தந்
தேலுமூர்க்கன்பூஞெனயாருஞ் சீலமுறச்
செப்பவரமுந்தந்தசெல்வவிளையாட
லப்பனேபோற்றிஹராபோற்றி யிப்புவியிற்
சீராமனுளுகையிற்செய்சூத்திரன்றவத்தால்
நேராவகாலமரணம்நேர்ந்து போரா
மறையோன்சிசுவிறக்கமற்றவனைக்கொன்ற
இறையோன்பழிக்கஞ்சியித்தலத்திற் குறைதீரப்
பூசித்ததற்குவந்துபோதவரந்தந்தருள்செய்
மீசித்ராமீச்சுராபோற்றி தோசித்
தனமாயனலோன்முன்சத்தவிருடிகளின்
மனையார்மேற்கொண்டமயலிற் கனையோன்
பெற்றசாபந்தீரப்பேணிப்பூசித்தகனு
லற்றமறுவன்னியப்பனேபோற்றி நற்றவஞ்செய்
கும்பமுனிபூசிக்கக்கோலமணக்காக்ஷியருள்
சம்புவேபாவவினாசாபோற்றி நம்புமன
வாலிபூசிக்கவந்தமாற்றூர்பெலன்பாதி
யேலக்கொடுத்ததிருவாலீசா கோலப்
பிரமகயிலாயப்பேரரசுவேதபுரிப்
பரமசயிலப்பருமா சிரமப்
படக்கராப்பற்றிபரியாதிமூலா
யிடர்க்காணெனவேயிரங்கிப் படப்பாய
லானுகவந்தளித்தவாதியேதண்கடனை
மானேபொருணைமாவென்று போநேர்
தடுத்தமருதீசாசம்போவரதா
கடுத்ததும்புகண்டாகருத்தா நடப்பா

அடியவர்களென்னாளுமன்பூறுமின்பம்
நெடிதுபெறச்செய்தருணித்தாபோற்றி படிமீதுன்
னாமத்திருப்புகழைநன்கோதுவாரெவர்க்குஞ்
சேமத்திருப்புகழைச்செய்யுமவர் நாமமே
சிந்தைசெய்நன்னெஞ்சேயென்றதிருஞானச்சம்
பந்தர்தமிழ்வேதப்பாட்டனே முந்தச்
சிவாயநமாவென்றுசிந்தித்திருப்பாற்
கபாயமொருநாளுமில்லை யுபாய
மிதுவேமதியாகுமென்றவைபாற்செப்பு
மதுவேமதியாயருள்.

குரிவிகுளம் ஜமீன் சம்பிரதி
மீனாட்சிசுந்தரமுதலியாரவர்களியற்றிய
ஸ்ரீசிவசயிலநாதர்துதிக்கலிவெண்பா



உ

தண்டாயுதபாணி துணை.

# ஸ்ரீ சிவசயிலம்

# பரமகல்யாணியம்பாள்

## பாதப்போதிற்சூடிய ஆசிரியவிருத்தம்.



மங்களஞ் சேருசிவ சயிலநகர் தன்னிலேமறைமலர்த்தவிசு
ளோனும்-பற்றுமுளதேவரொடுமாதவரனேகரும்பகுடவர்த்தனர்
களுநிதம், சங்கைய திலாமலே சந்ததங் கந்தமலர் சாத்தித்து
திந்துநின்பொற் - சரணமலர் போற்றியே யர்ச்சித்து மயல்நிற்ப
சாம்பவி பராக்கென்னவே, செங்கையிற் பொற்பிரம் பேடுதிரு
நந்தியந் தேவர்சன் னதிவிலக்கச் - சேடனுமுரைப்பரிய நின்வி
ழா வெழிலையிச்சேயாற் சொலற்பாலதோ, பங்கயத் திருமால்
பினங்கைபதி னாற்புவனி பணிபதாப்புய பாவையே - பன்னகம்
பூண்பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணி யுமையே. க

நத்திற் பொருத்திட்ட நகையில் மாணிக்கமும் நன்வயிர
மூக்குத்தியும் - நாடொலா மீடுமைகதிற் சிமிழ்து நேரிலா நளிமெ
விக் கொப்பினொளியும், முத்திற் பொருத்திட்ட வொளிவடத்
தொளியுமவன் முழுநிலா வெழில்மூங்க-முழுதுமைதுரியத் தாலி
லகு தாலியும் மோகராவின் னாமும், சித்திற் பொதிந்திட்ட நின்
னெழிலை ஞானமிக்சிறியனாற் செப்பலாமோ - சிவளரு ஸ்ரீசயில
மேவித் தவத்திலுறு சேவலாயன் றுபொற்கப், பத்திற் பொதிப்
புற வுநித்தவரி யுடனுற்ப வித்தபிரணவ ரூபியே - பன்னகம்
பூண்பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணி யுமையே. உ

அன்னாயிதெண்ணவுன் னம்பொற் பதாப்புயமனாதினம்
பரவிநிற்கு-மடியவர்க் கருளுநின் கலியாண குணமும்வடி
யேற்க ணெவனுற்றமேவா, பன்னாள தாயவென் சொற்செவியுறாத

தணி படர்கொப்ப தாற்றடுத்தோ - பாரிலோ வுரகரிட ஆரிலோ பங்கயப் பண்ணவனுறை பதியிலோ, பொன்னுய பேருப் பொருப்பின்ற பூவையே புத்தேளிர் புரமதனிலோ-புவனமதி லெங்கு ணிப்புதுமை நீ கேட்டுளாய் பூரணி பராசத்தியே, பன்னு விதெ ன்னவுன் னருளோஓர் பொருளோயிப் பாலர்க்கருள்தேக்கிடப் - பன்னகம் பூண்பரன் பங்கிலுறைபாரியே பரமகலியாணி யுமை யே. ௩

தஞ்சமென் றுன்பதந்தாழ்பவர்க் குடனருட்டயைபுரிபவளுமலேயோ-தர்மார்த்த காமமொடு மோட்சமெனு மிவைசதா தந்தருளுபவளுமலேயோ, வஞ்சமெனு னெஞ்சுடைய கஞ்சனுயிர் துஞ்சிடவும் வண்டிகிரிதொட்ட வரிபின் - வந்தமகமாயிநீ மாதங்கி கௌமாரி வயிரவி கபாலியல்லேயோ, செஞ்சொல்குற வஞ்சி யொடுகுஞ்சரிபு ணற்குமர செவ்வேளு மொருமருப்புச் - சிந்துரானனனேயு மீந்துதா லாட்டல்செய் தேவிதிரி புரையல்லேயோ, பஞ்சுடன் கஞ்சனிக ருஞ்சரண போதினிற்பணிசேய்க்கருட்பாலியாய் - பன்னகம்பூண்பரன்பங்கிலுறைபாரியே பரமகலியாணி யுமையே. ௪

எந்தைநீ யெனையீன் றெடுத்தமுத மூட்டியே யின்பாய் வளர்த்தவளுநீ - யென் றுவனுதினமு நின் பாதமே துணையென் றிருப்பதும லாதுவேறோர், சிந்தையெள் சிந்தையிற் சேர்த்தூநா ளுள தோசொற்றேவிநீயரியாததோ-தேகி யென்பர்க்கிபா லேபிகளிடத்துரா தென்கவ லொழித்தருளுவாய், விந்தையினு விந்தையரவிந்தலோ சனிநீ யிவ் வேளையுன் மனதிளகியே - வேண்டுவன நல்கிட நினைண்டகை யுடனிவண் டாண்டவி வராவிடினுமே, பந்தைப் பொருப்பைப் பழித்துநகு கனதனப் பைங்தொடி பரஞ்சோதியே- பன்னகம் பூண்பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணியுமையே. ரு

வாகைநீ மகிடவுரு வாகிவரு மவுணனுயி ாய்த்துத் துவைத்தவளுநீ- மங்கைநீமாயனிட தஙகைநீமன் றுளில்வாதமோ காளி நீ, வாகைபுனைவஞ்சனிட நெஞ்சிலுதை கொண்டகல் வானிடையிருந்து தீயோன் - வண்மைகுலையச்சமயம் வாய்த்தவரலாறுயரி வளரிட முரைத்தவளுநீ, சூகையுரி பாகனிட பாகமுறை சுந்தரி

சொல்லரிய ஜோதியொளிநீ - சூக்ஷாதி சூக்ஷமாய்ச் சூழ்ந்தவளுநீ யெனைத் தொண்டனுக் கொண்டவளுநீ, பாகைப் பலாவின் பழத்தைப் பழித்துநகு பணியருட் குதலைமொழியாய் - பன்னகம்பூண் பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணி யுமையே. ௬

எத்தனை ஜெனனங்க ளித்தரணியின் கண்ணெடுத்துழன் றேனோ வம்மா - யினியாகிலுங்கருணை பாலித் தினிப்பிறவி யில்லா தொழித்திடம்மா, இத்தனை வர்மங்க ளிவ்வேழை மீதுறிலேற்க திற னில்லை சும்மா - யேதிலார் போலநாமிருவர்வா தாடுவதி லேளனமுனக்கே யமா, அத்தனிட பாகமதில் நித்தமுறை யம்மைநின் னமுதொழுகு வாய்திறந்து - வஞ்சல் தவிரென் றுரைப் பிற்றரள மிறையுமோ வதையுள்ள வருகனலனே, பத்தனைய மாயவினை மாளவொரு தந்திரம் பகருவதுனக் கருமையோ - பன்னகம் பூண்பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணி யுமையே. ௭

பண்ணினால் நிறையுண்ட நின்பாத போதினிட பனுவலல்லாதுவேறோர் - பாசுரமிலாதிடினு மாதரவி லாதிவண் பதறிச் சுழன்று நெஞ்சம், புண்ணாகு வேன்றனைப் புல்லரிற் புல்லியப்புரகசர்ப் புளகமெய்தப் - பூரவாகினியெனப் புகழினுஞ் செவிகொடாப் பூரியரிடத்துத் தள வெண்ணாதே யான்மிகவுமேழையினுமேழைநின் னிருகணு னோக்கியருளா - யேகாக்ஷீயிவன் பாவியிற் பாவியென் றேளனஞ் செய்துநிற்கப், பண்ணாதே பண்ணிடிற் பழியுறுமதுவுன் பதாம்புயமறியாததோ - பன்னகம் பூண்பரன் பங்கிலுறைபாரியே பரமகலியாணி யுமையே. ௮

தேசுநிறை கேசியய னேசமொ டனேகநாட் டேடியுங்காணவொண்ணுச்-சீரடிய தாற்றிருச் சிற்றம்பலத்தாடு தேசிக ருடன்னடித்தோய், மாசுநிறை பாசகனு மாசையொடு பேசிடு மனுவுண்டுமதுவென்னெனில் - மாயவுலகிற்றிரியுமங்கயர் வலைப்படா மனவுறுதி யருளலொன்று, ஆசுமுத னாற்கவியு மான்றோருவப்ப [illegible]டிபணிய வருளலொன்று - ஆணவமெனுமபேயை யணுகவொட் டாமனின்னருள்பொழிந் தாள்வதொன்று, பாசுநிற மேனியாய் நேசமுட னீயுனது பாலனைக் கொள்ளலொன்று - பன்னகம் பூண்பரன் பங்கிலுறை பாரியே பரமகலியாணி யுமையே. ௯

தென்மதுரை யங்கயற் கண்ணிமுக் கண்ணனுடை தென்னி

பொன்றுன்னிதழுந் - தேற்றமது பண்ணியரு ணண்ணிடவு நுண்ணிடை தேடிக்குதித்துநின்று, சொன்மதுர பண்ணணியு முன்னிநதா ளென்னிருதயத்திருக் திடுவதென்று-செழியர்குல முதலிநின் மதலைசொற் குதலையிற்செற்றஞ்செ லுத்தலழகோ, இன்மதுரை புணரி யினைவிளரி பொடுமுரலு மிணரணியு மியைய மதலா-பின்றோபி னென்றோபி கொன்றோசொல் நன்றோகற் குன்றோவி னிகபமறியேன், பன்மதிய வெழிலொளிர் பங்கபப் பாதமலர் பணியுமெற் கருள்செய்தன்றோ-பன்னகம் பூண்பரன் பங்கிலுறை பரிவேய பரமகலியாணி யுமையே. ௰

முந்நீ ருடைப்புணரி சூழ்புவியி னிற்புகழ்மா மோனருறை மாதிரங்கண் - மூன்றுனின் னருளடைய முபலுநா ளன்னோர் முனைஞுசெப்பவமோருருவதாய், வெந்நீ ருடைக்கடமா வொன்று தபமாககிரி வெள்கியுனை வேண்டவுடனே-வெட்டியடியார்குறை விலக்கிபர சுரிமையருள் வேதனுமோ ராதவிமலாய், செந்நீ ருடைப்பாளை விழுழைசய கோபால கிருஷ்ணவென்றே செழுமையாய். செப்பிடின் பனைமுதவு மெய்ப்பொருள பாக்யமொடு சேவைதந் தாள்சமயமே, பைந்நீ ருடைக்கதலி பனசமா விக்குடன் பருகு கரிமுகனையாவும்- பன்னகம் பூண்பரன் பங்கிலுறை பரிவேய பரமகலியாணி யுமையே. ௰௧

முற்றிற்று.

இப்பாமாலை சிவசைலதலபுராணம் அச்சிட்டுதவிய

எப். எஸ். கோபாலகிருஷ்ண அய்யரவர்கள்

இயற்றியது.



# பிழை திருத்தம்.

டயிட்டில் பக்கம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| | | 8 | சுந்திர | சுந்தர |
| | | 20 | ஷை | ஷை |
| | | 23 | ஷை | ஷை |

சிரப்புப் பாயிரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 1 | பாத்தா | பாத்தார் |
| | ,, | 2 | சேய் | செய் |

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | இமைய | இமய |
| | 3 | 1 | மலர்ப்பத | புலர்பிக |
| 2 | 5 | 2 | துத்தி | நுத்தி |
| 3 | 10 | 1 | லயனு | லயனும் |
| | 12 | 2 | நீற்றுரை | நீற்றரை |
| 4 | 17 | 2 | லுங் | லும் |
| | 18 | 4 | புரிசிவ | புரிச்சிவ |
| | 19 | 2 | நூற்றென் | நூறென் |
| 5 | 20 | 3 | போலும் | போலுந் |
| | 22 | 2 | கேறே | கேரே |
| | ,, | 3 | தேறே | தேரே |
| | 23 | 1 | பெருக | பெருகப் |
| 6 | 4 | 3 | குலை | கொலை |
| | 4 | 4 | சயிலத | சயிலத் |
| | 5 | 2 | கணி | மணி |
| | 6 | 1 | போற்றி | போற்றிச் |
| 7 | 8 | 3 | வளை | வள |
| | 12 | 1 | வடவனெதிர்ப்பை | வாட்டவனெதிர்பை |
| | ,, | 3 | மயிர்க்கூம்பி | மலர்கூம்பி |
| | 14 | 3 | தரு | தகு |
| 8 | 15 | 1 | மின்துடி | மின்றுடி |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 8 | 18 | 1 | கருதி | கருதித் |
| | 19 | 3 | கண் | க |
| | 21 | 1 | சாய்த்து | சாய்ந்து |
| 9 | 22 | 4 | றுள்ள | றள்ள |
| | 28 | 3 | பொருப்பாய் | பெருப்பாய் |
| | 29 | 1 | துசு | துச்சு |
| 10 | 35 | 1 | பின்வி | பின்னி |
| 11 | 38 | 4 | சிகலை | சிக்கலை |
| 13 | 54 | 3 | முத்திமிழ் | முத்தமிழ் |
| | 1 | 4 | கர்பெரு | கர்ப்பெரு |
| 14 | 9 | 2 | தசைப்பரி | தசைபரி |
| 15 | 13 | 2 | லுடு | லூடு |
| | 14 | 1 | பாணிசிவ | பாணிச்சிவ |
| 16 | 19 | 1 | மைதிற | மைத்திற |
| 17 | 2 | 3 | வில் | வெத் |
| | 6 | 1 | யொருக்கால | யொருகால |
| | 9 | 3 | தற் | தல் |
| 18 | 11 | 4 | வின்று | வென்று |
| 19 | 18 | 2 | முதவிடு | முதவிடு |
| 20 | 26 | 3 | புண்ணிய | புண்ணியச் |
| | ,, | ,, | குள் | குட் |
| | ,, | 4 | தி | டி |
| | 28 | 4 | வாசி | வசி |
| | 30 | 1 | பிதிர்க | பிதிர்க்க |
| 21 | 36 | 4 | லாய்சு | லாய்ச்சு |
| 22 | 41 | 1 | விடத | விடத் |
| 23 | 50 | 4 | புண்னிய | புண்ணிய |
| 24 | 4 | 1 | வீறும் | வீறுந் |
| | ,, | 4 | தவம்பே | தவப்பே |
| 28 | 35 | 4 | ருமாய் | மொய் |
| 29 | 37 | 3 | யுதிரம் | யுதரம் |
| | ,, | ,, | யனகு | வனகு |
| 35 | 83 | 2 | தின் | திற் |
| 36 | 84 | 2 | பாத்திய | பாத்ய |
| 37 | 1 | 4 | டவிசின | டவசின் |
| | 2 | 1 | பயந்த | பயன்ற |
| 38 | 50 | 3 | தேடறி | தேடரி |
| | 12 | 1 | மாய் | மாய்ச் |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 39 | 14 | 3 | புனற் | புனல் |
| | 16 | 3 | ழருபத் | ழறுபத் |
| | 19 | ,, | கர் | கா |
| 40 | 22 | 3 | சொரூ | சொரு |
| 42 | 2 | 1 | மதவன் | மத்தவன் |
| 44 | 20 | 1 | கேமக்கொடடி | க்ஷெமக்கோட்டி |
| | ,, | 2 | வரற் | வரல் |
| 46 | 23 | 1 | ளனைத்து | ளமைத்து |
| | ,, | 2 | மிமை | மமை |
| 48 | 11 | 3 | நிகழ்ந்தீட | நிகழ்த்திட |
| 49 | 15 | 4 | தோததி | தோத்தி |
| 52 | 8 | 3 | முகன்றன்னை | முகந்தன்னை |
| 54 | 19 | 3 | ஞோடு | ஞொடு |
| 56 | 6 | 4 | துமுறை | தும்முறை |
| 57 | 15 | 3 | சீர் | சீர்ச் |
| 63 | 11 | 3 | தனிப்பு | தனிபு |
| | 12 | 4 | னன்நெடு | னனெடு |
| 64 | 15 | 2 | னன்நனி | னனனி |
| | 17 | 4 | நிறுவில் | நிறுவி |
| 70 | 61 | 1 | கொற்றதெண் | கொற்றத்தெண் |
| | 62 | 3 | சின | சின் |
| | 63 | 3 | சிறுவளை | சுறிவளை |
| 73 | 84 | 4 | ரூட | ரூடப் |
| 74 | 90 | 3 | ஊர்ந்து | யூர்ந்து |
| | 90 | 2 | வலித்தர் | வலித்தார் |
| | 92 | 2 | தேரினை | தேரினைக் |
| 75 | 98 | 4 | ரனபிஞ | ரன்பிஞ |
| 76 | 105 | 2 | கள்நா | சஞ |
| 78 | 1 | 1 | கைச்சூ | கைசூ |
| | 2 | 4 | றிக்ரு | றிக்கிரு |
| 84 | 9 | 1 | பூயந்த | பயந்த |
| | 14 | 2 | ஞன் | ஞ |
| 85 | 14 | 3 | நன் | னன் |
| | 16 | 3 | சூத்திரர் | சூத்திரன் |
| 86 | 27 | 4 | சாய்கை | சாயை |
| 87 | 32 | 4 | சங்கராசங்கார | சங்காரசங்கரா |
| | 34 | 1 | மகிட்சி | மகிழ்ச்சி |
| | 34 | 4 | தாகுத்த | காகுத்த |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 90 | 52 | 4 | க்குரேச | க்குரோச |
| 91 | 1 | 1 | மகிடசி | மகிழ்ச்சி |
| 94 | 20 | 3 | ஞேக்கி | நோக்கி |
| | ,, | 5 | கீழ்பான் | கீழபால் |
| | 21 | 2 | ௌடு | நெடு |
| 95 | 28 | 4 | வுன் | யுன் |
| | 29 | 3 | காராணாய் | காரணராய் |
| 96 | 37 | 1 | குரேச | குரோச |
| 98 | 49 | 2 | புகழ்வோரும் | புகழ்வோருஞ் |
| | 50 | 4 | புகட்சூத | புகழ்ச்சூத |
| 99 | ,, | 14 | யாறறினிடச் | யாறறிடப்பாற் |
| | ,, | 22 | கோணுட் | கோணுச் |
| 102 | ,, | 28 | பேரர | பேரா |
| | ,, | 30 | ப்பறறி | ப்பற்றப் |
| 103 | ,, | 5 | புகழை | புகளே |
| 104 | 1 | 7 | யெழலே | வெழிலே |
| 105 | ,, | ,, | 104 | 105 |
| | 6 | 1 | னுயி | னுயிர் |
| 106 | ,, | ,, | 105 | 106 |
| | 9 | 4 | மங்க | மங்கை |
| 107 | ,, | ,, | 106 | 107 |